சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 18] 1967-௵ மாசி-௴ 1௳ (13-2-67) [இதழ் 2

தனிப்பிரதி 25 நயா பைசா வருடச் சந்தா ரூ. 3-00

## உள்ளுறை

பக்கம்

# PRESS & REGISTRATION OF BOOKS ACT.

Registration of Newspapers (Central) Rules, 1956.
FORM IV (SEE RULE 8)
R. No. 1485/57.

Statement about ownership & other particulars about "KUMARAGURUPARAN" - (Monthly)

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication | ... Srivaikuntam |
| 2. | Periodicity of its publication | ... Monthly |
| 3. | Printer's Name | ... Kumaraguruparan Achagam |
| | Nationality | ... |
| | Address | ... Sakattukara Street<br>... Srivaikuntam |
| 4. | Publisher's Name | T. M. Kumaraguruparan Pillai B. A., B. L., |
| | Nationality | ... Indian |
| | Address | Permanent President, 'Srivaikuntam Sri Kumaraguruparan Sangam' |
| 5. | Editor's Name | T. M. Kumaraguruparan Pillai B. A., B. L., |
| | Nationality | ... Indian |
| | Address | ... Managing Editor<br>... Srivaikuntam |
| 6. | Names and addresses of individuals who own the newspapers and partners or shareholders holding more than one percent of the total capital. | ...Srivaikuntam Sri Kumaraguruparan Sangam<br>...(Registered under Act XXI of 1860) |

I, T. M. Kumaraguruparan Pillai, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

T. M. Kumaraguruparan Pillai B. A., B. L.,
Signature of Publisher.

12—2—1967.

# 6. விஜய லக்ஷ்மீ

அஷ்டபாருயுதாம் தேவீம் ஸிம்ஹாஸன வரஸ்த்திதாம்!
ஸுகாஸநாம் ஸுகேசீம் ச கிரீடமகுடோஜ்வலாம்
ச்யாமாங்கீம் கோமளாகாராம் ஸர்வாபரண பூஷிதாம்!
கட்கம், பாசந்ததா சக்ரம் அபயம் ஸவ்ய ஹஸ்தகே!
கேடகம் சாங்குசம் சங்கம் வரதம் வாமஹஸ்தகே!
ராஜரூபதராம் சக்திம் ப்ரபுஸௌந்தர்ய சோபிதாம்!
ஹம்ஸாருடாம் ஸ்மரேத்தேவீம் விஜயாம் விஜயாப்தயே!!

எட்டுக்கைகளோடு கூடியவளும், உயர்ந்த சிம்மாஸநத்தில் சுகாஸநமாக இருப்பவளும், அழகிய கேசத்தையுடையவளும், மகுடகிரீடத்தோடு விளங்குபவளும், கருத்த அங்கங்களையுடையவளும், அழகியவுருவத்தையுடையவளும், எல்லா அணிகளாலும் அலங்கரிக்கப்பட்டவளும், வலது நான்கு கைகளில் கத்தி. பாசம், சக்ரம், அபயம் இவைகளை தரிப்பவளும், இடது நான்கு கைகளில் கேடயம், அங்குசம், சங்கு, வரதம் இவைகளைத் தரிப்பவளும், பேரரசியானவளும், மிகுந்த அழகினால் விளங்குபவளும், அன்னவாஹனத்தில் அமர்ந்தவளும் ஆகிய விஜயலக்ஷ்மீ தேவியை வெற்றியை அடையும் பொருட்டுத் தியானம் செய்கிறேன்.

மாறுதல் - குறிப்பு

1. உட்கார்ந்த உருவம்
2. இரண்டு பக்கத்திலும் சக்திகள்


விஜயலெட்கமி.

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை

# குமரகுருபரன்



மலர் 18 | பராபவஹு மாசித் திங்கள் 1ம்உ [13-2-67] | இதழ் 2

## நீதிநெறி விளக்கம்

(கட்டுரை 8)

தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்

சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்

ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,

காஞ்சிபுரம்.

நெடும்பகற் கற்ற அவையத் துதவா
துடைந்துளார் உட்குவரும் கல்வி — கடும்பகல்
ஏதிலான் பாற்கண்ட இல்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்.

சொல்வன்மை யில்லாரது கல்வி பயன்இன்று என்பது இதனால் அறியலாவது.

பல நாட்கள் கற்றனவாகி அறிஞர் சபையில் சொல்லு தற்குப்பயன் படாமல், பின்னடைந்தோர் தம் அச்சத்தைத் தருங்கல்வி, யாவரும் காணலாகும் (பட்டப்) பகலில் அயலானுடன் கலந் துறையக் கண்ட இல்லாள் விளைக்கும் பொல்லாங்கினும் மிக்க பொல்லாங்கு விளைப்பது. ஏன்? அம்மனைவி உதவாள் என்று அகற்றி விடுதலைப் போலக் கல்வி தீயது என்று நீத்தல் அரிது. ஆதலின்,

கற்பழிந்த மனைவியை அவள் இனி உதவத்தகாதவள் என்று நீக்கிவிடலாம். அதுமிக எளிது. கற்ற கல்வி எழுமையும் ஏமாப்பு உடையது. அதை நீக்கிவிடல் எளிதன்று அரிதரிது.

"பல நாளாகத் தம்மாற் படிக்கப்பட்ட நூல்கள் சவையிலே எடுத்துச் சொல்லுதற்குக் கைகூடப் பெறுமல் தோல்வி அடைந்த வருடைய அஞ்சுதலைக் காட்டுங் கல்வி பசிப்பிணியால் வருந்திச் செல்லும் உச்சிக் காலத்திலே [அட்டிற்றெழிலும் (சமைக்கும் வேலையும்) விட்டு] அயலவன்பால் வசப்பட்டிருக்கக்கண்ட மனை யாளினும் தீயதாகும். (ஏனெனின்) அவளைத் தீயவள் என்று நீக்குமாறு போலத் தன்னை(க் கல்வியை)த் தீயது என்று நீத் தற்கு அரியது,"

"கற்கப்பட்ட நூல்களைப் பல முறையும் நினைத்து மநத் திலே அமைத்திருத்தல் வேண்டும் என்பது கருத்து."

"உட்கு-அச்சம். அது நுதல் வியர்த்தல் முதலிய (அடை யாளங்களைப்) பற்றி அறியப்படுவது. பெரிதும் விளக்கம் உடைமை பற்றி உச்சிக்காலம் கடும்பகல் எனப்பட்டது. கடி- விளக்கம். வருந்தித் தேடிவைத்திருந்தும் உற்ற சமயத்தில் உத வாமை பற்றிப் பொல்லாதே என்றார்." இவ்வளவும் சுண்ணுகம் பெரும்புலவர் உரை.

"நெடுநாள் கற்ற நூல்கள் அவையத்திற் சொல்ல உத வாமல் தோற்றவர்களது அஞ்சுதல் வருங்கல்வி, கடும்பகலில் அயலானெடு கூடியிருக்கக் கண்ட (தன்) மனையாளினும் கொடி யதே. (ஏனெனில்) இவள் கொடியவள் என்று மனையாளை நீக்கி விடுவது போல இது தீயது என்று அவையத்து உதவாத அக் கல்வியை நீக்குதல் அரிது ஆதலான்," (இது பிறிதோருரை.)

கடும்பகற் கண்ட என்றதனுல் அவ்வேதிலானுக்கும் இவ் வில்லாட்கும் தீயொழுக்கப் பயிற்சி மிகை குறிக்கப்பட்டது. ஏதிலான் பயிற்சி மட்டும் கொண்டு கூறுதல் பொருந்தாது.

இனி இதற்குப் "பசிப் பிணியால் வருந்திச் செல்லும் உச்சிக் காலத்திலே அட்டிற்ருெழிலும்விட்டு என நயங்கூறுவாருமுளர். அட்டிற்ருெழிற் குரியகாலம் முற்பகல் என்பது, 'பின்பகல் உணங்கல் அட்டும் பேதைமார்' எனுந்திருவாக்கான் அறியக் கிடத்தலானும் அட்டிற்ருெழிலும் விட்டு என்றதனுற் பெறப் படும் விசேடப் பொருள் யாதும் இன்மையானும் அது பொருந் தாது." என்பது புகழுடலெய்திய இருமொழிப்புலவர். வி. சிதம் பரராமலிங்கப்பிள்ளை எழுதியது.

"பல நாளாய்த் தான் கற்றனவாய நூல்களால் ஆய பிரயோ சனத்தைக் கற்று வல்லோர் சபையினிடத்துப் பெருமற் போன வரது நாணத்தக்க கல்வியைக் கொடியது என்று நீக்குதல் கூடாது. ஆதலால் அது நெடும் பகலில் அயலானிடத்து இருக்கக் கண்ட தன் மனையாளினும் ஒருவனுக்குப் பொல்லாத தாகும்.

சபை முன்னிற்கும் சமயத்தில் தனக்குப் பயன் படாக் கல்வி, பிரசித்தமாய்ப் பிறனை அணைந்த இல்லாளினும் பொல் லாததே. இல்லாளை நீக்கலாம். அக் கல்வியை நீக்குவதோ அரிது என் பதாம்." (இது அ. மகாதேவசெட்டியார் உரை.)

இவ்வுரையில் நெடும் பகல் என்றதற்குப் பல நாளாய் என்றும் கற்ற என்றதற்குத் தாம் கற்றனவாய நூல்களாலாய பிரயோசனத்தை என்றும் உதவாதுடைந்துளார் என்றதற்குப் பெருமற் போனவர் என்றும் உட்கு வரும் என்றதற்கு நாணத் தக்க என்றும் கடும்பகல் என்றதற்கு நெடும் பகலில் என்றும் உரைத்தது.

பகல் – ஒரு நாள். பகல் முழுதும் – ஒரு நாள் முழுதும். "முற்றப்பகலும் முனியாது இனிது ஓதிக் கற்றலிற் கேட்டலே நன்று" என்றதிற் பகல் (ஒரு நாள்) முழுதும் வெறுப்பின்றிக் கற்றல் உணர்த்தப்பட்டது. நெடும்பகல்கற்ற – நெடுநாளாகக்

கற்றநூற் பொருள்கள். நாள், பகல், வைகல் முதலிய சொற்கள் ஒரு வேளையைக் குறித்துவரும் இடங்களும் உள. அப்படி இப் பாட்டிற் பகல் என்ற சொல் நின்றிலது.

"கல்லாது போகிய நாளும் பெரியவர்கட்
செல்லாது வைகிய வைகலும் ஒல்வ
கொடாஅ தொழிந்த பகலும் உரைப்பிற்
படா அவாம் பண்புடையார் கண்."

என்னும் நாலடிச் செய்யுளில் ஒரு நாளின் மூன்று வேளையைக் குறித்து நின்ற வாறறிக. இதிற் காலையிற் கற்றலும் மாலையிற் பெரியார் வாய்க்கேட்டலும், பகலிற் கொடுத்தலும் பண்புடைமைக்குரியன என்றதறிக. இங்கு நெடும் பகல் என்றது அங் குள்ளது போல்வதன்று.

'உட்குவருங்கல்வி' என்றதில்உள்ள உட்குவரல் நாணுதல் என்ற பொருளதன்று. அதற்கு அப்பொருள் பிற்காலத்தது. அகராதியில் உள்ளதால் ஆதாரமாமோ? 'சம்மந்தம்' என்றது அகராதி கொண்டு பொருந்துமென்ற புதுமை போல்வதாகும் அவ்வாதாரம்.

. ஆசிரியர் குமரகுருபர முனிவரர் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழிலே

"கருமுகி லுக்கரி தாமடி வாரம்
கண்டிரு பறவைகடம்
கண்களி பொங்கவொர் பறவை முடித்தலை
காணு துட்குவர"

என்றும்,

சிதம்பர மும்மணிக்கோவையிலே, பதினுலாவது பாடலிலே

"எழுவகைச் சனனத் தெம்மனோரும்
உழிதரு பிறப்பிற் குட்குவந்து அம்ம
முழுவதும் ஒரீஇ முத்திபெற் றுய்வான்
நின்னடிக் கமலம் போற்றுப"

என்றும் பாடியருளியதால், 'உட்குவரும்' என்றதற்கு அஞ்சுதல் வரும் என்றே பொருள் கொள்ளல் தகும். அவர்

காலத்தில் நாணும் என்ற பொருள்கொள்ளப்பட்டிலது, வெள்ளை யர்க்குக் கற்பித்த காலத்தில் வெள்ளையர் சொல்லிய பொருள் அவர் இயற்றிய அகராதியிற் புகலாயிற்று. குறிஞ்சிப் பாட்டுள் (184) "நாணும் உட்கும்" என்றுள்ள வற்றுலும், அப் பாட்டிலே அடி 2 உரையில் "இந்த மணம் தலைவனும் யானும் பெருமையும் உரனும் அச்சமும் நாணும் நணுகிய நிலையாற் பிறந்த கந்தருவ மணம்" என்றெழுதியதாலும் அச்சம் நாண் இரண்டும் ஒன்றல்ல, 'உட்கு' என்றது அவ்விரு பொருட்கும் உரிய தன்று, அச்சம் என்னும் பொருட்டே எனல்புலப்படும். இவ்வாறு உரை எழுதியதற்கு ஏது என்னை? தொல்காப்பியத் திலே உள்ள

"பெருமையும் உரனும் ஆடூஉ மேன"

"அச்சமும் நாணும் மடனும்முந் துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப"

என்ற நூற்பாக்களே யாம். உரியியலில் "உருஉட்கு ஆகும்" என்றதே உண்மைப் பொருளை எழுதச் செய்வது 'முருகன் சீற்றத்து உருகெழு குருசில்' என்புழிக் காண்க. பெருங்கதையில் 'உட்கும் நாணும் ஒருங்குவந்தடைதர உட்கும் நாணும் ஒருங்கு வந்தடைய', சிந்தாமணியில் 'உட்கும் நாணும் ஒருங்கு வருதலின்' எனவருதலும் காண்க. "குறமகள் முருகு இயம் நிறுத்து முரணினர் உட்க முருகு ஆற்றுப்படுத்த உருகெழுலியல் நகர்" என்ற திருமுருகாற்றுப் படை யடிகளுக்கு ஆசிரியர் நச்சினுர்க் கினியர் "குறச்சாதியாகிய மகள், முருகன் உவக்கும் வாச்சியங் களை வாசிக்கப் பண்ணித் தெய்வம் இன்று என்பார் அஞ்சும்படியாகப் பிள்ளையார் (முருகவேள்) வரும்படி வழிப்படுத்தின அச்சம் பொருந்தின அகற்சியையுடையநகர்" என்றுரைத்தார்.

'பீடுடைய வரும் உட்க' (300) 'யான் பெரிதும் உட்கி' (403) நட்புப் பகை யுட்கு (591) என்று சிந்தாமணியில் வந்துள்ள இடங்களுள் ஓரிடத்தும் நாணம் பொருளாக இல்லை. தொல் காப்பியத்தில் 'உரு உட்கு ஆகும்' என்றவாறே புறநானூற்றில் 'ஆனுது உருவும் புகழும் ஆகி' என்புழி 'அமையாது உட்கும் புகழும் ஆக' என்றும் 'உருகெழு ஞாயிறு' என்புழி 'உட்குப்

பொருந்திய ஞாயிறு' என்றும் 'குருதி வேட்கை உருகெழு முரசம்' என்புழி குருதிப் பலிகொள்ளும் விருப்பத்தை யுடைய உட்குப் பொருந்திய வீரமுரசம்' என்பதும் பத்துப்பாட்டிலே 'உரு கெழு செலவு' 'உருகெழுதாயம்' உருகெழு குருசில்' 'உருகெழு நெடுவே ள்,' உருகெழு பெரியோர்,' 'உருகெழு பாணுள்' என் னும் இடங்களில் எழுதிய உரையும் சிறிதும் வேறுபடாதவை. புறப்பொருள் வெண்பாமாலையுள் (25)

"வெட்சியாரைக் கண்ணுற்று வளைஇ
உட்குவரத் தாக்கியுறழ்செருப் புரிந்தன்று"

என்பதும், 'வடவர் உட்கும் வான்ருேய் வெல்கொடி' 'ஒன்ணர் உட்கும் துன்னருங் கடுந்திறல்' என்று பதிற்றுப்பத்திலும் புறத் திலும் வருவதும் அச்சப்பொருட்டேயாதல் அறிக.

"அடிகளுக் கிடமருங் கிருந்த ஆய்மலர்க்
கடிகமழ் தாமரைக் கண்ணிஞன் இவன்
வடிவமே வாய்திறந் துரைக்கும் வானவன்
ஒடிவறு பேரொளி உட்கத் தக்கதே"

என்ற சிந்தாமணியிற் சிந்தாமணியாக உள்ள பாடலும் அதன் உரையும் உணர்ந்து உவக்கத்தக்கன.

இதுகாறும் 'உட்குவரும்' என்பதன் உண்மைப் பொருளை யும் அது நாணும் என்னும் பொருளது அன்று ஆதலையும் விரித்து எழுதினேம். இதனைச் சாதிக்க இத்துணை முயற்சி வேண்டாதது எனினும், அறிதல் வேட்கையுடையார்க்கும் பெரி தும் பயன்தரும் ஆதலின் வேருருவகையிலும் இதனை விளக் குதல் நன்ருயிற்று. ஆகவே அதையும் குறிக்கின்றேம்.

'நெடும்பகல் கற்ற அவையத்து உதவாது உடைந்துளார் உட்குவருங் கல்வி' என்றதை, (1) நெடும்பகல் கற்றமை (2) அவையத்து உதவாமை (3) உடைந்துள்ளமை (4) உட்கு வரலுடைமை என்று நான்கு பண்பு அத்தகைய கல்விக்கு உண் மையை ஆசிரியர் குறித்தார்.

ஒருநாள் இருநாள் கற்றவை மறந்துபோம். மிக்க பயிற்சி இல்லாமையால் மறத்தல் இயல்பாகும். நெடும்பகல் கற்றும்

மறத்தல் நேரின், அஃது அத்துணை நாள் கற்றுப் பயின்ற பெருக்கத்தின் விளைவாகாது. பன்னுள் கற்றுப் பயின்ற பயிற்சியும் உடையவன்; மறவியும் இல்லாதவன்; அவனது அத்தகு கல்வி அவையத்து உதவவில்லை, ஏன்? அச்சமே அஃது உதவாமைக்கு ஏது. அவையஞ்சுதலின் விளைவே பன்னுள் ஓதிப் பயின்ற கல்வியும் அவையத்து உதவாது உடைதல். 'அவையஞ்சுதல்' 'அவையஞ்சாமை' என்றல் மரபு.

"கருவிகள் அனைத்தும் என்னுட் கலந்துநின் றியக்கா நிற்கும்
ஒருவனை அன்றி யானே உஞற்றுதல் இன்மை யாலே
மருவுமென் பாடற் குற்றம் பொறும் என மதிக்க நாணித்
திருவமர் கல்வி சான்றோர் திறத்தொன்றுஞ் செப்பிலேனே."

என்ற தணிகைப் புராணச் செய்யுளில் வரூஉம் நாணம் அவை நாணம் அன்று. சொல்வதிற்றோன்றும் நாணம் ஆகும். 'நாணிச் செப்பிலேன்' என்றதால் அதை அறியலாம். அவையடக்கத்தில் நாணம் உண்டாகலாம். அவைக்கு அச்சமும் அச்சமின்மையும் (அஞ்சாமையும்) தொடர்புள்ளவை. நாணம் தொடர்புடையதன்று. அவைக்கு அடக்கமும் அடக்கம் இன்மையும் தொடர்புள்ளவை. அங்கு அடங்க வேண்டுழி அடங்காமை நாணம் இல்லாமையாலும் அடங்க வேண்டுழி அடங்குதல் நாணம் உண்மையாலும் நிகழும். இஃது அத்தணிகைப் புராணச் செய்யுளால் அறியத்தகும்.

நெடும்பகல் கற்ற (நூற்பொருள்) அவையத்து உதவாமைக்கு அச்சமே காரணம். அவையஞ்சாதானுயின், அவன் தான் பயின்ற கல்விப் பெருக்கத்தினை அவையிற் புலப்படுத்தாமல் அச்சத்தால் உடையமாட்டான். அவையஞ்சியுடைவாரைக்

'கல்லாதவரிற் கடையென்ப கற்றறிந்தும்
நல்லார் அவையஞ்சு வார்'

என்றும் நெடும் பகல் கற்றவை அவையில் உதவாமையைப்

'பகையகத்துப் பேடிகை யொள்வாள் அவையகத்து
அஞ்சுமவன் கற்ற நூல்.'

என்றும் அவையஞ்சியுடைந்துளானுக்கும் அவன் கற்ற கல்விக்கும் இயைபு இல்லாமையை

வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு?
நூலொடென் நுண்ணவை அஞ்சுபவர்க்கு"?

என்றும் திருவள்ளுவர் உணர்த்தினர். இந்நீதிநெறி விளக்கம் 'திருக்குறளின் சாரம்' என்பதற்கு ஈதும் ஒரு சான்ருகும்.

அத்தகு கல்வியால் அவனுக்கு வரும் பொல்லாமை, கடும் பகலில் ஏதிலான்பாற் கண்ட தன் இல்லாளால் கணவனுக்கு வரும் பொல்லாமையினும் பெரிது. காரணம் அவளையும் விலக்கித் தானும் அவளின் விலகித் தனியாகலாம். அதுபோல், அக்கல்வியின் நீங்கித் தான் (கற்றேன்) தனியாதல் அரிது. கல்வி ஒருமையிற் கற்றதாயினும் எழுமையும் ஏமாப்புடைத்து. அதனுல் அதனை நீத்தல் அரிதே. அவையஞ்சுமவன் தான் கற்ற கல்வியின் நீங்கவோ தன்னின் வேருகக் கல்வியை நீக்கவோ வல்லனல்லன் ஆவன். ஆயினும், நீப்பரிதாய அக் கல்வியொடு அவ்வுயிர் உள்ள தெனினும் தான் கற்றவற்றைக் களன் அஞ்சி அவ்வைக் களத்திற்கு ஏற்பச் சொல்லமாட்டாத காரணத்தால் (அவ்வுயிர்) (வாழ்கின்றதாயினும் உலகத்தாரால் எண்ணப்படாமையின்) இறந்தொழிந்ததொடு ஒப்பதே. அன்றி, அவையத்து உதவாததால் நீப்பரிதாய கல்வி யுள்ளவரெனினும், அஃது இல்லாரொடு ஒப்பவரே; களன் அஞ்சிக் கற்ற செலச் சொல்லாமையால் 'அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வி' என்று முன்னர்க்கூறியதும், 'அவையத்து உதவாது உடைந்துளார் உட்குவருங்கல்வி' என்று பின்னர் (இங்கு)க் கூறியதும் நோக்கின், 'கலைமகள் வாழ்க்கை' எனத் தொடங்கும் பாடல் இவ் விரண்டற்கும் இடையிலிருத்தல் பொருந்தாமை தெளியப்படும்.

அவையத்துதவாமைக்கு ஏது உட்குரவல், அதன் பயன் உடைதல். அவ்வுடைவுற்ருர் கற்றவர். அவர் ஒருபகல் இரு பகல், கற்றவர் அல்லர். நெடும் பகல் கற்ருர். அங்ஙனம் கற்றனவும் அவையத்துதவாமையின், அக் கல்வி தீதாயிற்று. அத் தீமையின் அளவும் ஏதிலான் பாற் கண்ட இல்லினுல் அவள் கணவனுக் குண்டாகும் தீமையின் அளவும் ஒக்கும் ஆயினும்ஒரு திறத்தில் அவை வேறுபடுகின்றன. அத் திறம் யாது?

அருங் கற்பழிந்தாள் நீக்குதற்கு எளியளாதலும், பயிற்சிப் பெருக்க முற்றும் அவையிலுதவாத கல்வி என்றும் நீக்குதற்கு அரியதாதலும் வேறுபடுந்திறம்.

'கண்ட இல்' என்றதிற் பெயரெச்ச வினையாகிய காட்சிக்கு ஏது ஆதல் குறிக்கக் 'கடும் பகல்' என்றார். பிறர் சொல்லக் கேட்டு நம்பியதால் உற்ற பொல்லாதது அன்றென்பார் 'கண்ட இல்' என்றார். தீதென்று நீப்பரிய கல்விபோல்வாளல்லள், நீப்பெளியள் என்பார் 'இல்லினும்' என உறழ் பொருட்டாய ஐந்த னுருபும் உம்மையும் சார்ந்துரைத்தார்.

இல்லாள்பால் ஏதிலானைக் காண்டலின்றி, ஏதிலான்பால் இல்லாளைக் கண்டமையின், இல்லாள் மிக்க தீமை விளைத்தாள் என்பார் 'கண்ட இல்லினும் பொல்லாது' என்றார்.

கோதமமுனிவன் ஒரு பூசையுருவாய்ப் போகிய புரந் தரனைத் தீவிழிசிந்த நோக்கியதும், அவன் செய்ததை உணர்ந் ததும், 'செய்ய தூயவன்' என்னும் உயர்வுக்குரிய செம்மையும், தூய்மையும், அடங்கச் சாபந்தருங்கோபம் இரண்டும் தடுப்பரிய வாய் ஒங்கியதும், 'ஆயிரமாதர்க்குள்ள அறிகுறி உனக்குண் டாக' என்று ஏயினதும், அகலிகை எனப்படும் அம் மெல்லிய லாளை நோக்கி, 'விலைமகள் அனைய நீயும் கல்லியல் ஆதி' என்றதும் இங்குக் கருதற்பாலன. ஏதிலான்பாற்கண்ட இல்லினை எளிதின் நீத்தமைக்கு ஈதோரெடுத்துக்காட்டு. இருவர்க்கும் 'ஏதிலான்பாற்கண்ட இல்' என்றது பொதுமை. கடும்பகற் காணுமையும் கருத்தாற் பிழையாமையும் அகலிகைக்கு மட்டும் உள. என்னை? 'மாமுனிக்கு அற்றம் செய்து பொய்யிலா வுள்ளத்தான்றன் உருவமே கொண்டு புக்கதும், 'புக்கு அவ ளோடும் காமப் புது மணமதுவின் தேறல் ஒக்க உண்டு இருத்த லோடும் உணர்ந்தனள்' ஆதலும், 'உணர்ந்த பின்னும் தக்கது அன்று என்ன ஒராள்' ஆயும் 'தாழ்ந்தனள்' ஆகியும் 'இருப்ப' தும் 'நெஞ்சினுல் பிழைப்பிலாளை நீ அழைத்திடுக', என்று சீற் றத்தில் ஏற்றமாக தோற்றமுடைய மாற்றருந் தவத்தோன் துணிந்து கூறுங் கூற்றத்திற்கு ஏதுக்கள் போலும். விரிவஞ்சி இதன்கண் உள்ள இலக்கணக் குறிப்புக்களை விடுத்தாம்.

(தொடரும்)

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

---

மலர் 18, இதழ் 1-ன் தொடர்ச்சி

### The Lord is Within thee

### இறைவன் உம் உள்ளத்துள்ளே உள்ளான்

137. மன்னும் ஒருவன், மருவு மனோமயன்
என்னின் மனிதர் இகழ்வர்; இவ்வேழைகள்
துன்னி மனமே தொழுமின்; துணையிலி
தன்னையும் அங்கே தலைப்படலாமே.

The Only Being, the Eternal Being
Within thee He dwells:
When thou sayeth so,
These ignorant men laugheth low;
Poor folk! if they but seek Him in prayer within
Then Shall they meet Him, - the Peerless One.

நித்தியனாகும் இறைவன், நமது மனத்திலேயே கோயில் கொண்டுள்ளான். இவ்வாறு நாம் சொன்னால், மனிதர்கள் நம்மை ஏளனம் செய்கிறார்கள். அறிவில்லாதவர்கள்! அவர்கள் மனத்துள்ளே இறைவனைச் சிந்தித்தால், அங்கேயே அவனைச் சந்திக்கலாகும்.

### Fate of those who pursued the False Faiths

### பொய்ந்நெறிகளைப் பின் பற்றியோர் நிலை

138. ஓங்காரத்து உள்ளொளியுள்ளே உதயமுற்று
ஆங்கார மற்ற அநுபவம் கைகூடார்;

சாங்காலம் உன்னுர்; பிறவாமை சார்வுருர்;
நீங்காச் சமயத்துள் நின்ருெழிந்தார்களே.

They wake not to the inner light of Om within;
And joy not in the ego-effaced bliss ensuing
They wot not of the approaching Death,
They seek not the end of recurring Birth,
Lo! they pursued the unending path of Contending faiths,
And stood forlorn, for ever last.

பிரணவ வடிவாக தம் முள்ளேயே ஒளியாக இருக்கும் இறைவனை மனிதர் தெரிந்து கொள்கின்ருரில்லை; அவ்வனுபவத்திலே வரும் ஆணவங்கெட நின்ற பேரின்ப நிலையைப் பெறுகின்ருரில்லை; இறப்பு வருவதைக் கருதினுரில்லை. பிறப்பை வெல்லும் நெறியைக் கடைப்பிடித்தாரில்லை. முடிவினைக் காட்ட இயலாத சமயநெறி பிணிக்கநின்று, கரையேற அறியாது வருந்துகின்றனர்.

## The Lord pervadeth all Faiths

## எல்லாச் சமயத்துள்ளும் இறைவன் உள்ளான்

139. இமையவர் தம்மையும் எம்மையும் முன்னம்
அமைய வகுத்தவன் ஆதிபுராணன்
சமையங்களாறும் தன்ருளிணைநாட,
அமையங் குழல்கின்ற ஆதிப்பிரானே.

He is the Ancient One,
He created the beings of the earth and heaven,
-In days of yore, in Order divine;
The Six Faiths seeketh the Feet
But of the One Primal Peerless God;
And in then all He pervadeth in measure appropriate.

முதல்வனும் இறைவன் மனிதரையும் தேவரையும் முறைப்படி படைத்தான். ஆறு சமயங்களும் அம் முதல்வன் திருவடியை நாடுகின்றன. அவற்றுளெல்லாம் அவன் ஒத்த முறையில் படர்ந்து நிற்கின்ருன்.

---

(தொடரும்)

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## உ ரை ந டை

பாலகவி வயிநாகரம்,
திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

(மலர் 18. இதழ் 1-ன் தொடர்ச்சி)

நெட்டுடற் பைங்கட் கரும்பேய்கள் செம்மயிர்
நிரைத்தூணம் வீக்கியார்த்து
நிற்குங் குறட்பூத மொன்றினை விடுத்துடலின்
நெடியபழு வென்புநெரியக்

கட்டெனப் பிடியெனக் கொடிறுடைத் தடியெனக்
கணநாதர் கடுகமுடுகிக்
கடல்வாய் திறந்தெனப் பிலவாய் திறந்தலறு
காட்சிநீ காணுயலை

மட்டுடைத் தூறுந் தடங்கமலன் முதலியோர்
வாய்புதைத் தஞ்சிநிற்ப
வருகென் றழைத்திடவும் வாரா திருத்தியால்
மாற்றிவன் முனிந்தா லுனக்

கட்டதிக் கினிலுமொரு திக்கிலையெ மையனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 68

நெடிய உடலையும் பசிய கண்களையும் உடைய பெரிய பிசாசுகள், சிவந்த மயிராகிய வரிசையாயுள்ள தூண்களை இறுகக் கட்டி நிற்கின்ற குறட் பூதமொன்றை விட்டு உடம்பிலேயுள்ள நீண்ட விலாவெலும்பு, முறியும்படி கட்டு எனவும் பிடியெனவும் கன்னத்தில் அறையெனவும் கணநாதர் செலுத்திக் கடுக அதற்கஞ்சிக் கடல்வாய் திறந்ததைப் போலப் பிலம்

போன்ற வாயைத் திறந்து அலறுகின்ற காட்சியை நீ, இங்குக் காணுமலிருக்கவில்லை. இதழ்கள் விரியத் தேனூறுகின்ற பெரிய தாமரையோனுகிய நான் முகன் முதலானவர்கள் வாய்புதைத்து அச்சத்துடன் நிற்க வா வென்று உன்னை அழைக்கவும் நீ வாரா திருக்கின்ருய். இவன் அது பற்றி உன்னிடம் சினம் கொண் டாளுனல் உனக்கு எட்டுத் திக்குகளிலும் வேருெரு புகலிடம் கிடையாது. ஆதலின் எமது தலைவனுடன் சந்திரனே! விளை யாட வருவாயாக. அழகு பொலிகின்ற கந்தபுரிப்பதி தழையும் படி வந்துள்ள கந்தப்பெருமானுடன் சந்திரனே! விளையாட வருவாயாக.

குன்றைத் திறந்திட்ட குடுமிவேல் சூருயிர்
குடித்திட விடுத்துநின்ருன்
குண்டிகைக் கள்வனைக் குடுமித் தலைப்பசுங்
குருதிபொங் கப்புடைத்தான்

இன்றைக் குழந்தையென் றெண்ணுது குலிசன்முதல்
எண்மரும் பிறருமொருஞான்
றெதிர்நின் றுடற்றியவர் பட்டபா டறியா
திருத்தியலை யதுகிடக்க

முன்றக்கன் வேள்விக் களங்கொலைக் களமென்ன
முடியமரர் மொத்துண்டநாள்
முழுமதிக் கடவுணீ யவமதிப் புண்டது
மொழிந்திடக் கடவதன்ருல்

அன்றைக் கணக்கின்றும் வந்திருக் கின்றதினி
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 69

மலையைப் பிளந்த உச்சியை யுடைய வேற்படையைச் சூரனது உயிரைக் குடித்து வரும்படிவிட்டு நின்றவனும் கையில் குண்டிகையைக் கொண்ட பிரமதேவனது குடுமித் தலைகளில் பசுங்குருதி பொங்கும்படி புடைத்தவனும், ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்காமல் இன்றைக் குழந்தை யென்று எண்ணி வச்சிரப் படையை யுடையவனுகிய இந்திரன் முதலிய திக்குப் பாலகர்

எண்மரும் மற்றைத் தேவர்களும் முன்ெனாரு காலத்தில் எதிர் நின்று பகைத்து அவர்பட்ட பாட்டை நீ யறியா திருப்பாயல்லை. அது கிடக்க; முன்பு தக்கனது வேள்விக்களமே கொலைக் களமாக முடிசூடிய தேவர்கள் அனைவரும் மொத்துண்ட போது முழுமதிக் கடவுளாகிய நீ அவமதிப்பை யடைந்தது சொல்லக் கடவதன்று. அன்றைய நியாயம் இன்றைக்கும் வந்திருக் கின்றது. இனி சந்திரனே! விளையாட வருவாயாக. அழகு பொலிகின்ற கந்தபுரிப்பதி தழையும்படி வந்துள்ள கந்தப்பெரு மானுடன் சந்திரனே! விளையாட வருவாயாக.

தள்ளும் பவக்கடல் உழக்குமெனை முத்தித்
தடங்கரை விடுப்பவனுனைத்
தலையளிப் பான்வர வழைப்பவும் வராவிடில்
தண்ணளி சுரந்துகருணை
வெள்ளம் கொழிக்கும் கடைக்கண் சிவப்பவிவன்
வெகுளாது விடினுமழுது
விழிசிவப் பக்காணி னிரவிபகை சாய்த்தவிள
வீரன் பொறுப்பானலன்
கள்ளம் பழுத்தகட் கடைசியர் சிருர்திரைக்
காவிரித் தண்டுறைதொறும்
கதிர்நித் திலங்குவி மணற்குன்ற மேறியக்
கலைமதிக் கலசவமுதை
அள்ளுந் தடம்பணைச் சோணுட னிவனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 70

வினை தள்ளுகின்ற பிறவிக் கடலிலே கிடந்து உழலும் என்னை, முத்திப் பெருங்கரையிலே சேர்ப்பவனாகிய இவன் உனக்குத் தலையளி செய்து இன்பம் வழங்குவான். உன்னை வரும்படி இவன் அழைக்கவும் நீ வாராவிட்டால் குளிர்ந்த திரு வருளைச் சுரந்து கருணை வெள்ளம் கொழிக்கின்ற கடைக் கண்கள் சிவக்கும்படி கோபமடையா விட்டாலும் அழுது விழி சிவப்பதைக் கண்டால் பானுகோபனைப் பொருது கொன்ற வீர

வாகு அதனைப் பொறுக்க மாட்டான். களவு முற்றிய கண்களை யுடைய கடைசியர்களின் சிறுவர்கள் அலையை யுடைய காவிரி யாற்றின் தண்ணிய துறைகள் தோறும் ஒளி வீசுகின்ற முத்துக்கள் குவியும் மணற் குன்றுகளில் ஏறி அந்தக் கலைகளை யுடைய சந்திரனாகிய கலசத்திலுள்ள அமுதத்தை அள்ளுகின்ற பெரிய வயல்களையுடைய சோழ நாடனாகிய இவனுடன் சந்தி ரனே! விளையாட வருவாயாக. அழகு பொலிகின்ற கந்தபுரிப் பதிதழையும்படி வந்துள்ள கந்தப்பெருமானுடன் சந்திரனே! விளையாட வருவாயாக.

(தொடரும்)

---

# THE SAINT WHO EXERCISED HOSPITALITY EVEN IN THE WORST PENURY

**Professor E. S. Varadharaja, Iyer.**



Maranar was a native of Ilayangudi, who hailed from the fourth Varna and who was a staunch devotee of the Cosmic dancer of the Golden Hall. He had untold wealth got from the rich produce derived through his ploughshare and his heart was full of the overflowing milk of kindness to Lord Siva with his matted locks. When anyone who was an earnest devotee of Siva, who wore the wreath of bones, approached him, he used to bow before them and give out words of love and devotion, irrespective of their caste, creed or community. He used to invite them to his abode, wash their feet, perform archana and feed them with six-fold tasty dishes according to their desire. His wealth accumulated day by day and as a result of his having fed sumptuously the devotees of the lord Paramount, he lived in the most affluent circumstances, like Kubera, the Eldorado of Alagapuri.

Now the Lord of Thillai, wanted to show to the world, that this benefactor, who exercised hospitality unstintingly, when he was affluent, was quite capable of doing so even in straitened circumstances and so schemed to make the devotee to lose all his wealth and espouse poverty. But, even when his resources ran short, the charity-minded prince of Ilayangudi, did not give up his liberal habit, and continued to perform his deeds of charity, by pledging his belongings, why, even his ownself.

While his act was thiswise, the Lord, who stood beyond the ken of even Tirumal and Brahma, who assumed the forms of the Hog and the Swan, came down on earth, in order, it may be benefited, in the guise of a Sadhu, leaving behind his sacred Bull and unaccompanied by his consort. It was rainy. He was in the pangs of terrible hunger. All houses stood closed; but even at that dead of night, the Nayanar with sweet-smelling wreath, welcomed the new guest. He wiped off the rain drops on his frame, offered him a seat and being eager to feed him, asked his wife what he should do to appease the hunger of the devotee. He said 'Although we have no meal for ourselves, we have to prepare a fitting meal for the Bhakta, who is a favourite of the Lord of Kailasa, who has on his left the daughter of Himavan. She replied, that she could not see any way to satisfy the devotee, that being very late in the night, no neighbour will give them anything, that there was no other go and that ill-fated as she was, she was at a loss as to what to do. She further said, 'We sowed some paddy seeds only this morning in order to do away with our misery. If you can just fetch the sprouts, we shall try to prepare something. I could not think of any other means'. On hearing these words, the Nayanar grew spirited and being very eager to entertain the Sadhu, he began to ransack the fields. The rain poured in torrents and the impenetrable darkness which disabled people from seeing even things which were at their very side, looked like the melting of the thick volume or the cluster of night. It also appeared at midnight like the thick paste of collyrium. Anyhow propelled by the affection that generated in his heart, Ilayangudi Maran placed a vessel on His

Head and wended his way to the fields, when even the feathered kind, slept. He felt his way with his legs, collected the unripe shoots of paddy, that sprouted and came floating in the small water course, placed them in the wide-mouthed vessel and returned home, carrying the same on his head. On seeing him, his wife reeeived the same from the threshold with a loving heart, washed it in water and told him that there was no firewood to light the oven. He thereon pulled up the reeds that projected in that ungainly abode. She then placed them in the hearth, fried the sprouts, converted them in-to rice, put them on the boiling pot, prepared the meal and asked her husband what to do for the curry. Thereon, Nayanar with heartfelt devotion and love for the visitor, who, he knew was in the pinches of acute hunger, because of the ennui caused by his long walk, put his hands on the sprouting seeds in the dryland, plucked them as if he plucked the roots of his evil karma and offered the same to his life-mate. The devoted house-wife, sifted the curryseeds, cleaned them with water, deposited the same in a clean vessel, prepared a variety of dishes and completed the precious menu, not however without a thought of her miserable predicament. She then showed her husband the prepared meal and said that they may proceed to entertain the devotee unparalled. The host then approached Him who is beyond all thought or meditation, woke him up from his slumber and accosted him as follows:- 'Oh! Venerable Saint! who has come here to relieve us from our deep ajnanam, please accept the meal.' While he uttered the above words there was visible a bright halo and the couple stood dumbfounded. When he, who could not be seen even by Hari and Brahma, stood in the form of a flash of light,

the couple stood bewildered. Thereon, Sankara who was mightily pleased, appeared before them on the sacred Bull with his Devi with sweet smelling tresses and facing the lovable pair who performed the Maheswara Pooja, replete with sanctity and told them as follows:—

"Oh! my loving devotee! who carried out the Atiti Puja, please come to my world with your beautiful wife and live in perfect happiness, attended even by Kubera, who will be at your beck and call holding immense wealth in his hands". Having said this, he made his exit conferring on them eternal bliss; He, who reduced to ashes the three aerial cities, known as Tirupura." This is the story of Ilayangudimara Nayanar as told in the Periyapurana.

---

# கரிவலன் குளம்

எழில்மிகு இயற்கைக் காட்சிகளும், பச்சைப் பசேலென்ற நெல் வயல்களும் மிகுந்து காணப்படும் ஒரு சிறிய கிராமமே கரிவலன்குளம் ஆகும். அது திருநெல்வேலி நாகர்கோவில் ரஸ்தாவில் திருநெல்வேலியிலிருந்து சுமார் 22 மைல் தொலைவில் தென்மேற்கிலுள்ளது. இவ்வூரின் வழியாக அநேக பேருந்து வண்டிகள் செல்கின்றன. தென்னிந்தியாவிலேயே சிறந்த ஒரு நடராஜர் ஆலயம் இருக்கும் கீர்த்தி வாய்ந்த ஊருமாகும் இவ்வூர். ஆருத்ரா தரிசன விழா மிகச் சிறப்பான முறையில் ஒவ்வொரு ஆண்டும் கொண்டாடப்படுகிறது. ஆதியில் இவ்வூர் காட்டு யானைகள் அதிகம் சஞ்சரிக்கும் அடர்ந்த காடாக இருந்தது.

களக்காட்டில் உள்ள கோயிலை நிர்மாணித்த மார்த்தாண்ட வர்மனின் சந்ததியைச்சேர்ந்த சௌந்திர பாண்டியன் என்ற மன்னன் ஓர் அற்புதக் காட்சியை இவ்விடத்தில் கண்டான். அநேக காட்டு யானைகள் அங்கு உள்ள ஓர் குளத்தைச் சுற்றிச் சுற்றி வலம் வந்து விளையாடிக்கொண்டிருந்தன. இதன் காரணமாக அக்குளத்தின் கரையில் சிவபெருமானுக்கு ஓர் அற்புதமான கோயிலும் அரசன் கட்டுவித்தான். அதன் பிறகு இவ்வூர் கரிவலன் குளம் எனப்பெயர் பெற்றது.

இவ்வூரின் கீழப்பகுதி கீழக்கரிவலன் குளம் என்றும், மேற்குப்பகுதி மேலக்கரிவலன் குளம் எனவும், அழைக்கப்படுகிறது. கீழக்கரிவலன் குளத்தில் ஸ்ரீ ஷண்முகரின் அழகிய ஆலயம் ஒன்று உள்ளது. சுவாமியின் பெயர் இளைய நாயனூர்

---

*இது சென்னை இந்துப் பத்திரிகையில் 1—1—67-ல் வெளிவந்த கரிவலம்குளம் என்ற ஆங்கிலக் கட்டுரையைத் தழுவி எழுதப்பெற்றுளது. -திரு. பக்ஷிராஜன் அவர்கள் விஞ்ஞான ஆசிரியர், ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி, ஸ்ரீவைகுண்டம்.*

என்பது. இவ்விக்கிரகம் இப்பிராந்தியத்தில் உள்ள சிறந்த சிற்பிகளினுல் செய்யப்பட்டது. இது திருச்செந்தூர் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்வதற்காக செய்யப்பெற்றது. திருச்செந்தூர் கோவிலிலிருந்த மூலவரை டச்சு வியாபாரிகள் தங்கள் கப்பலி லேற்றி கவர்ந்து சென்றும் அவர்கள் விருப்பம் நிறைவேருத வாறு இடுக்கணில் அகப்பட்டு மேற்படி விக்கிரகம் கப்பலி னின்றும் கடலுள் தள்ளப்பெற்றது. கடலினுள் தள்ளப்பெற்ற விக்கிரகம் கண்டுபிடிக்கப்பட்டு மீண்டும் திருச்செந்தூரில் பிரதிஷ்டை யாகவே அதற்காகச்செய்யப்பெற்ற புதுவிக்கிரகம் கரிவலன் குளத்திலேயே பிரிதிஷ்டை செய்யப்பட்டது. இங்கு கந்தசஷ்டி விழா மிகச் சிறப்பாகச் கொண்டாடப்படுகிறது. மேலக்கரிவலன் குளத்தின் வடபகுதியில் ஸ்ரீ நடராஜரின் அழகிய சிறிய கோயில் அமைந்துள்ளது. இக்கோவிலின் பிரதான நுழைவாசல் கோவிலின் தென்பகுதியில் உள்ளது. இவ்வூரின் பெயருக்குக் காரணமாக இருந்த குளம் கோவிலின் முன்புறம் உள்ளது. ஊரைச்சுற்றியுள்ள அழகிய நந்தவனங் களும் அடர்த்தியான மரங்களும் இவ்வூரின் அழகை மேலும் சிறப்புறச் செய்கின்றன.

இக்கோவிலில் சிறந்த நுணுக்க வேலைப்பாடுகள் மிகுந்த அநேக சிற்பங்கள் உள்ளன. செளந்தர பாண்டியனுல் பிரதிஷ்டை செய்விக்கப்பட்ட செளந்தர பாண்டீஸ்வரரின் பிர தான ஆலயம் கிழக்கு நோக்கி உள்ளது. இக்கோவிலின் முன் புறம் ஒரு கம்பீரமான மணி மண்டபம் உள்ளது. செவ்வக வடிவமானதும் அழகானதும் உயர்ந்ததுமான இந்த மண்ட பத்தில் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்ததும் பிரமாண்டமானது மான பன்னிரண்டு தூண்கள் உள்ளன. ஒவ்வொரு தூணும் ஒரே கல்லினுல் ஆகியது. இந்த ஒவ்வொரு தூணும் தன்னுள் பதினுறு சிறிய தூண்களை அடக்கியிருப்பதோடு அந்த ஒவ் வொரு சிறிய தூணும் வெவ்வேருன நாதத்தை ஒலிக்கும் தன்மையாக அமைந்துளது.

அதி அற்புதமான சித்திரவேலைப் பாடமைந்த சிற்பங் களுள் பீமன், தருமர், புருஷமிருகம், போன்றவர்களின் சிற் பங்கள் மிக மிகச் சிறந்தனவாகும். உண்மையில் இம் மண்டபம் இக்கோவிலின் கலைப் பொக்கிஷமாகும்.

ஸ்ரீநடராஜர், ஸ்ரீசிவகாமசுந்தரி அமர்ந்திருக்கும் கர்ப்பக் கிருகம் தெற்கு நோக்கி உள்ளது. ஸ்ரீநடராஜர் ஆலயத்தின் முன் புற மண்டபத்தில் பதஞ்சலி, வியாக்ரபாதர், சௌந்தர பாண்டிய மன்னன் அவரது பத்தினியார், மகள் ஆகியோரின் சிற்பங்கள் அழகாக அமைந்துள்ளன.

கர்ப்பக்கிருகத்தில் ஸ்ரீநடராஜர், பக்கத்தில் தனது தேவி யாருடன் கம்பீரமாகக் காட்சி தருகின்ருர். தம்மை நாடி வந்த பக்தர்களுக்கு அனுக்கிரகங்களை அருளி வருகிருர். இங்குள்ள ஸ்ரீநடராஜசிலையின் அமைப்பே ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. மற்ற ஆலயங்களிலுள்ள நடராஜ விக்கிரகத்தின் விரித்த ஜடைமுடி போலல்லாது இங்குள்ள விக்கிரகங்களுக்கு ஓர் அழகான மகுடம் தலையை அலங்கரிக்கிறது.

இந்தக் கோவில் ஏற்படுத்தப்பட்டது பற்றியும் அதில் நடராஜரின் சிலை பிரதிஷ்டையானதைக் குறித்தும் ஒரு கர்ண பாரம்பரியமாக கதையொன்று வழங்கப் பெற்று வருகிறது. சிதம்பரம், செப்பறை, கட்டாரிமங்கலம், கரிசூழ்ந்தமங்கலம் ஆகிய ஊர்களில் உள்ள நடராஜரின் விக்கிரகங்களை அமைத்த ஸ்தபதியே (சிற்பியே) இச் சிலையையும் இறைவன் அருளிஞல் அமைத்ததாகக் கதை ஒன்று கூறுகிறது.

சௌந்தர பாண்டியனுக்கு ஓர் அழகான மகள் இருந்ததாக வும் அவள் திருமணமாகும் பருவம் அடையும்பொழுது துரதிர்ஷ்ட வசமாக மூளைக் கோளாறு ஏற்பட்டு பைத்தியமாஞள் என்றும் அந்த நோயைத் தீர்க்க அரசன் எவ்வளவோ முயன்றும் பயனில் லாததால், அவளதுநோயைக் குணப்படுத்துபவருக்குத் தன்னு டைய மகளையும், ராஜ்யத்தையும் கொடுப்பதாக விளம்பரம் செய் வித்தானென்றும், சேர நாட்டைச் சேர்ந்த ஓர் அந்தணர் அரச ரது மகளின் நோயைக் குணப்படுத்த அரசன் அறிவித்திருந்த படிதன் மகளையும்,இராஜ்யத்தையும் அந்த அந்தணரை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டியும், அந்தணர் அதைப்பெற மறுத்து விட்டு அரசனிடம், அவனது ராஜ்யத்தின் ஈசான்ய (வடகிழக்கு) திசையில் ஓர் குளத்தைச் சுற்றி யானைகள் வலம் வரும் இடத்தில் ஸ்ரீசிவபெருமானுக்கு ஓர் ஆலயம் கட்டுவிக்க வேண்டுமென்றும் அதோடு வலதுகை இல்லாத ஸ்தபதி ஒருவன் அவனிடம்

வருவான் என்றும், அவனைக்கொண்டு நடராஜ விக்ரகம் ஒன்று செய்வித்து அதை அக்கோவிலில் பிரதிஷ்டை செய்து விழாக்கள் பல சிறப்பாக நடைபெறச் செய்வதே தன் விருப்பமென்பதையும் அரசனிடம் கூறினான். அதன்படியே அரசன் அந்த இடத்தைக் கண்டுபிடித்து, ஸ்ரீ சிவபெருமானுக்கு அழகிய சிறிய கோயில் ஒன்றைக் கட்டிமுடித்து அவ்வூருக்குக் கரிவலன்குளம் என்ற பெயரிட்டும், அக்கோயிலிலுள்ள மூர்த்திக்கு சௌந்தரபாண்டீஸ்வரர் என்ற நாமகரணமும் மிக்க மகிழ்ச்சியுடன் சூட்டினான். அந்தணர் குறிப்பிட்ட பிரகாரம், கையில்லாத ஸ்தபதியும் அரசனிடம் வரவே, அந்தணர் கூறிய விபரத்தை அந்த ஸ்தபதியிடம் சொல்லி ஸ்ரீ நடராஜரின் சிலை ஒன்றை அமைக்கும்படி வேண்டிகொண்டான். வலக்கையை இழந்திருந்த அந்த ஸ்தபதியும் அரசன் வேண்டுகோளுக்கிணங்கி மரத்தினால் செய்த கையின் ஆதரவை வைத்துக்கொண்டு அழகான நடராஜர் விக்கிரகம் நிர்மாணித்தான். அவனால் இதற்கு முன் நான்கு திவ்விய ஸ்தலங்களிலும் செய்து கொடுக்கப்பெற்ற நடராஜர் சிலைகளைக்காட்டிலும் மிகுந்த அழகும், கவர்ச்சியும் ஒருங்கேயமைந்த சிலையாக இருந்தது. மேற்படி சிலையின் அழகைப் பார்த்து பரவசம் அடைந்த ஸ்தபதி, ஆனந்தக் கண்ணீர் மல்க தன்னை மறந்தவனாய் நடராஜர் சிலையைக் கட்டித் தழுவி முத்தமிட்டான். சிற்பி முத்தமிட்டதனால் சிலையின் கன்னத்தில் ஏற்பட்ட அடையாளத்தை சிவபெருமான் நிரந்தரமாகயிருக்கும்படி அருளி அவனது அன்பையும், பக்தியையும் உலகோர், என்றும் கண்டுகளிக்கக் கருணை பாலித்தருளினார். இன்னும் நம் எம்பெருமானின் எழிற் கன்னத்தில் அச்சின்னத்தைக் காணமுடியும். இம்மறு எம்பெருமானின் மாசற்ற அழகை மிகைப்படுத்துகிறது.

மார்கழி மாதத்தில் இங்கு சிறப்பாக நடைபெறும் ஆருத்ரா தரிசனத்திற்கு ஆயிரக்கணக்கான மக்கள் பல இடங்களிலிருந்தும் திரண்டுவந்து எம்பெருமானின் திருவருளில் திளைத்துப் பக்திப்பரவசத்தில் தன்னை மறந்த நிலைமையில் ஜன சமுத்திரத்தில் நீந்தி வந்து திருவடியே சிந்தனையாகக் கூப்பிய கரங்களோடும் நெருக்குண்டும், தள்ளுண்டும் தரிசனம் செய்யும் பக்தர் குழாத்தின் காட்சிக் கண்கொள்ளாக் காட்சியாகும்.

---

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 18, இதழ் 1-ன் தொடர்ச்சி]

## III

## SUNDARAMURTI SWAMI

(Abbreviated as SUNDARAR)

The Saint advises his fellow-poets to sing the praises of Siva rather than the praises of men because they seldom reward the poets. Siva rewards them here and hereafter. The Pari mentioned in 78 was a chieftain in the Tamil country in the early centuries of our era, famed for his liberality.

77. தம்மையேபுகழ்ந்திச்சைபேசினுஞ்சார்வினுந்
  தொண்டர்தருகிலாப்
பொய்ம்மையாளரைப்பாடாதேயெந்தைபுகலூர்பா
  டுமின்புலவீர்கா
ளிம்மையேதருஞ்சோறுங்கூறையுமேத்தலாமிடர்
  கெடலுமாம்
அம்மையேசிவலோகமாள்வதற்கியாதுமையுற
  வில்லையே.

77. Though ye fawn on men of lies,
  They to saints will nothing give,
Sing not them, O poets wise,
  But if ye would wealth receive
Sing the Sire of Puhalur;
  Here your wants will be supplied,
Pain will flee; there evermore
  Ye will kings in heav'n abide.

(To be continued)

---

# எல்லாம், அவளே!

புலவர், கோவி. திரிபுரசுந்தரி அவர்கள்,
தமிழாசிரியை,
சரோஜினி வரதப்பன் பெண்கள் உயர்பள்ளி;
பூவிருந்தவல்லி. சென்னை – 56.

பன்னருஞ் சிறப்பின் பாவலர் போற்றும்
விள்ளரும் மரபின் வளவர் நாட்டில்
விண்தோய் வளரும் பயன்மிகு தாருவாம்
தண்ணெனும் சோலை பனைகள் மலிந்த
சொல்லரும் மதிப்பின் பனசையெம் பதியில்,
மொழியும் மதமுமிரு கண்ணெனக் கருதி
தமிழும் சைவமும் தழைத்திடச் செய்யும்
பொழியும் அன்பின் அருளை ஏந்தும்
அருணந்தி மாமுனி அருந்தவன் வள்ளல்,
அகத்தியன் அளித்த அழிவிலாத் தமிழை
அலைகடல் பாயும் அம்மன் குமரிக்கும்
பாற்கடல் பள்ளித் திருமால் வரைக்கும்
குன்றும் அஞ்சும் பொருளை வாரி
அன்றும் இன்றும் என்றும் வளர்க்கும்
பயிற்றும் கல்லூரி பலவினுள் ஒன்றே
பனந்தாள் செந்தமிழ்ப் பன்னூல் கழகம்
– ஆங்கே
ஊழ்வினைப் பயனால் கல்வி எனக்கு
வீழ்வினை அளிக்கும் என்றே எண்ணி
முயற்சி இன்றி அயர்ச்சி கொள்ள
"தூங்கா திருப்பாய் துயரம் விடுவாய்;
யாங்கா யென்றன் பக்கல் வா"வென

ஆருயிர்த் தமக்கை அகிலம் ஆளும்
என்னுயிர்த் தமிழ்த்தாய் எழுப்பினள் விழித்தேன்
குறள் கொடுத்தாள் குரல் எடுத்தேன்.
சிலம்பு அளித்தாள் சிரித்துக் கொண்டேன்
மேகலை திருத்தினுள் மோனம் பெற்றேன்
குண்டலம் தந்தாள் குனிந்து விட்டேன்
– இனி
அன்னை என்றன் பின்னை அவளே;
பெற்ருேர் என்றன் மற்ருேர் அவளே;
முன்னேர் என்றன் பின்னேர் அவளே;
திருவும் உருவும் மருவும் மற்றும்
எல்லாம் அவளே எங்கும் அவளே
இடமே அவள்தன் இன்னருள் என்றும்
புடமே யிட்ட பொன்னைப் போலக்
காலமெலாங் கற்கக் கடைக்கண் காட்டின்
தமிழே தாயே தலைவணங்கி
வாழ்வேன் உனக்கா இவ்வையத்துள் பன்னுள்.

---

# சீவக சிந்தாமணியில் - ஓசை தரும் இன்பம்

திரு. மு. வை. அரவிந்தன் அவர்கள், எம். ஓ. எல்.,
தமிழ்த்துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

---

கவிஞனுடைய உள்ளத்திலிருந்து வெளிப்படும் சொற்கள் இசையருவியாய்ப் பாடிக் கொண்டே வருகின்றன. கவிஞனின் உள்ளத் துடிப்பிற்கும் உடல் அசைவிற்கும் உணர்ச்சிக்கும் ஏற்ப ஓசைகள் வேறுபடுகின்றன. கவிஞன் படைப்பில் ஓசையும் சிறந்த இடத்தைப் பெற்று விடுகின்றது. பாட்டைக் கற்போர் அதில் மறைந்து கிடக்கும் ஓசையைத் தேடிக் கண்டு பிடித்துப் பாடும்போதுதான் சுவைக்கின்றது. பாட்டு செவியால் நுகர வேண்டிய கலை. கம்பர் 'செவி நுகர் கனிகள்' என்று கவிதைகளைக் குறிப்பிடுகின்றார். செவி நுகர் கனிகள் பலவற்றை நுகர்ந்து மகிழ்ந்த பாரதியார்,

ஆசைதரும் கோடி அதிசயங்கள் கண்டதிலே
ஓசைதரும் இன்பம் உவமையிலா இன்பமன்றோ?
(- குயில்பாட்டு)

என்று நம்மை வினவுகின்றார்.

திருத்தக்க தேவர் இயற்றிய சீவக சிந்தாமணியில் பல வகையான ஓசைகள் அமைந்துள்ள பாடல்களைக் காணலாம். இடத்திற்கு இடம், காலத்திற்கு காலம் ஓசை வேறுபடுகின்றது. பேசும் மாந்தரின் பண்பு, உணர்ச்சிநிலை, உள்ளப்போக்கு ஆகியவற்றிற்கு ஏற்பத் தேவர் ஓசைகளைத் திறம்பட மாற்றியமைத்துள்ளார்.

சுடுகாட்டில் மகனை ஈன்ற விசயை எழுப்பும் துன்பக் குரல், காப்பியங் கற்போர் அனைவர் உள்ளத்திலும் சென்று எதிரொலிக்கின்றது. அழுகையொலியை அவள் உள்ளத்தில் தேங்கிக் கிடக்கும் துன்ப உணர்ச்சியைப் பாட்டின் ஓசை மிக நன்றாக வெளிப்படுத்துகின்றது:

'வெவ்வாய் ஓரி முழவாக,
விளிந்தார் ஈமம் விளக்காக,
ஒவ்வாச் சுடுகாட் டுயர்அரங்கில் –
நிழல்போல் நுடங்கிப் பேயாட,

எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக்
கூகை குழறிப் பாராட்ட
இவ்வா ருகிப் பிறப்பதோ?
இதுவோ மன்னர்க் கியல்வேந்தே!' (309)

இந்தப் பாட்டில் பெண்ணின் துன்பக் குரல் (ஒப்பாரி) மிகத் தெளிவாக ஒலிக்கின்றது.

வணிகன் சீதத்தனைத் தன் விஞ்சையால் தன்னிடம் வர வைத்த விஞ்சையன், தான் கருதியதை இனிது முடித்ததை எண்ணி எக்களிப்போடு பேசும் பேச்சைத் தேவர் பாடுகின்ருர்

ஈரலங்கல் ஏந்துவேல்
ஆரலங்கல் மார்பினுன்
கார்கலந்த கைக்கணி
சீர்கலந்து செப்பினுன்: (576)

துன்பமுற் றவர்க்கலால்
இன்பமில்லை ஆதலின்
அன்ப! மற்று யான் நினைத்
துன்பத்தால் தொடக்கினேன் (579)

பாட்டின் ஓசையே விஞ்சையனின் நெஞ்சக் களிப்பை நன்கு உணர்த்திவிடுகின்றது!

சீவகன் பாடிய இசையின் மேன்மையைத் தேவர் மெல் லோசையில் பாடுகின்ருர்:

சுரரொடு மக்கள் வீழ்ந்தார்
சோர்ந்தன புள்ளும் மாவும்
உருகின மரமும் கல்லும்
ஒர்த்தெழீஇப் பாடு கின்ருன்! (723)

அமைதியும் நெகிழ்ச்சியும் பாட்டின் ஓசையில் வெளிப்படு கின்றன.

திரைகள் அலைப்ப, கமலப் பள்ளியில் வெள்ளை அன்னம் உறங்கும் இன்பக்காட்சியை,

தோயும் திரைகள் அலைப்பத்
தோடார் கமலப் பள்ளி
மேய வகையில் துஞ்சும்
வெள்ளை அன்னம் காண்மின்! (930)

என்று பாடுகின்றார். இங்கே ஓசையும் அன்றோ உறங்குகின்றது!

சோற்றுத் திரளில் வாய் வைத்த நாயை அந்தணர் வெகுண்டு புடைக்கின்றனர். அந்தணர் சீறி முழங்கும் முழக்கம், நாயை மொத்தும் ஆரவாரம் ஆகியவற்றை,

கல்லொடு வன்தடி கையினர்; காற்றினும்
வல்விரைந் தோடி, வளைத்தன ராகிக்
கொல்வது மேயினர், கொன்றிடு கூற்றினும்
வல்வினை யார்வலைப் பட்டதை யன்றே (935)

என்று தேவர் பாடி, ஓசையாலே விளக்கி விடுகின்றார்.

தன் நாயைக் கொன்றுவிட்ட அந்தணரைக் கண்டு களிமகன் 'மழலைச் சொற்களின் வைது' பேசும் பேச்சு இது:

புடைத்தென் நாயினைப் பொன்றுவித் தீர், உயிர்
கடுக்கப் பேர்த்தனிர் தம்மின்! கலாய்க்குறின்
தடக்கை மீளிமை தாங்குமின்! அன்றெனின்
உடைப்பென் கட்குடம்! என்றுரை யாடினான்.

களிமகன் பேச்சில் இருக்கும் தடுமாற்றத்தைப் பாட்டின் ஓசை வெளிப்படுத்துகின்றது!

பந்தாடும் பெண் ஒருத்தியின் ஆட்டத்தை,

குழல்ம லிந்த கோதை மாலை
பொங்க வெங்க திர்ம் முலை
.... .... .... ....
அழல்ம ணிக்க லாப மஞ்சி
லம்பொ டார்ப்ப ஆடுமே! (1952)

என்ற பாட்டில் இனிது விளக்குகின்றார். இளம் பெண் குதித்து எழுந்து ஆடிப்பாடி அணிகலனும் குழலும் அசைய அசைய ஆடும் ஆட்டத்தை ஒலியே நன்கு காட்டுகின்றது.

சுரமஞ்சரியை மணக்கக் கிழவனுய் உருக்கொண்ட சீவகன் தோற்றத்தை,

வெண்ணரை உடம்பினன்; விதிர்த்த புள்ளியன்,
நுண்ணவிர் அறுவையன்; ஒசிந்த நோக்கினன்,
கண்ணவிர் குடையினன்; கைத்தண் டுன்றினன்;
பெண்ணலங் காதலிற் பேயும் ஆயினுன். (2010)

என்று குறிப்பிடுகின்ருர். கிழப் பருவத்தின் தளர்ச்சியும் நடுக்கமும் தடுமாற்றமும் ஓசையில் உள்ளன.

இரு பெரும் படைகளும் போரிட எழுந்தபோது உண்டான ஒலியை,

குணில்பொரக் குளிறின முரசம்! வெள்வளை
பணைபரந் தார்த்தன! பம்பை வெம்மின!
இணையில எழுந்ததாழ் பீலி எங்கணும்!
முணையினுல் கடலக முழக்கம் ஒத்தவே! (2222)

என்ற பாட்டில் முழக்குகின்ருர் தேவர்.

போர் முடிந்தபின், போர்க் களத்தில் குவிந்து கிடக்கும் பிணத்தைக் கண்டு இரங்கிப் பாடுகின்ருர்:

குடர்வாங்கு குறுநரிகள் கொழுநிணப் புலாற் சேற்றுள்
தொடர்வாங்கு கதநாய்போல் தோன்றின. (2442)

இப் பாடலில் நெகிழ்ந்த ஓசை உள்ளது.

சிந்தாமணியில், இன்னும் பலவகையான ஓசைகள் உண்டு. அவை, இலக்கியச் சுவையை மிகுதிப் படுத்திக் கற்பவரை ஆட்கொள்ளுகின்றன. ஓசை நயத்தால் பாடல் விளக்கம் பெறுவதைப் பல இடங்களில் தேவர் காப்பியத்தில் காணலாம்.

"பாட்டைத் திறப்பது பண்ணுலே" — *பாரதியார்.*

---

# நெஞ்சத்துள்ளே இறைவன்

திருமதி. G. மாலதி அவர்கள்,
ஸ்ரீவைகுண்டம்,

காலமெல்லாம் இன்பத்தேனில் திளைத்துக் கொண்டிருந்த மனிதன் ஒருவனுக்குச் சிறு துன்பமும் பெருந்துன்பமாகத் தோன்றுவது இயற்கையே. இந்நிலையில் அவன், "அட தெய்வமே! உனக்கென்ன கண் இல்லையா? இப்படிக் கதறுகின்றேனே! அது உன் காதில் விழவில்லையா? நீ என்ன செவிடா? உனக்கென்ன செவி இல்லையா?" என்றெல்லாம் இறைவனிடம் கேட்டு விடுகின்றான். என்னிடம் கேட்டால் அவன் இன்னும் சற்று அதிகமாகவேக் கேட்டிருந்தாலும் தவறென்றுமில்லை என்றே சொல்வேன். ஏனென்றால் இறைவனுக்கு கண்ணும் செவியும் மட்டும்தான் இல்லையா? கை, கால், உடம்பு இவை ஒன்றுமேதான் இல்லை. ஆம்—மெய், வாய், கண், மூக்கு, செவி, கை, கால், உடம்பு என்று இப்படி யமைந்த ஒரு உருவம் இல்லாதவன்தானே இறைவன். அவனைத்தானே பரம்பொருள் என்று சொல்லியிருக்கின்றார்கள் பெரியவர்கள்.

இந்த இறைவன் எல்லாப் பொருளிலும் கலந்து நிற்கின்றான். அவன் கலவா எப்பொருளுமே இப்பிரபஞ்சத்தில் கிடையாது. பிரகலாதன் கூற்றுப்படி, தூணிலும்-துரும்பிலும், நம் திருமூலர் வாக்குப்படி, இறை உண்டென்பவர்க்கு, அகத்தும் புறத்தும் நீக்கமின்றி நிறைந்திருக்கின்றான். இந்த இறைவன் ஒருநாள் இறைவியிடம், "யாம் சகலரூபம் கொண்டிருப்பது சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் ஐந்தொழிற்காகவே" என்று திருவாய் மலர்ந்திருளியிருக்கிறார்.

இப்படி நீக்கமற நிறைந்திருக்கும்போதே எல்லோராலும் எளிதாகக் கண்டு கொள்ள முடியவில்லை இந்தப் பரம்பொருளை,

அப்படியிருக்க, இந்தப் பரம்பொருள் ஓர்உருவில் மட்டும் நின்று அளிசெய்தால் எவராலும் காணமுடியாதாகிவிடுமே! இதனுல் தானே என்னவோ சகலரூபத்திலும் இருந்து கொண்டு அருள் செய்கின்ருன். இந்த இறைவன் உயிர்களுக்கு அருள் செய் வதற்காக,

"அரிதரு கண்ணி யாளை ஒருபாக
மாக அருள்கா ரணத்தில் வருவார்"

என்று முழக்கியிருக்கின்ருர் நாவுக்கரசர் பெருமான். எந்த உருவில் இருந்தாலும் சரி. 'நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே' வீற்றிருப்பான் இந்தப் புண்ணியன். இந்த பொன் மேனியனைத்தேடி அங்குமிங்குமாக அலையவேண்டியதில்லை. இறைவன்பாற் காதல் கொண்டு 'நீ எங்கே? எங்கே?' என்று அரற்றி அலைபவர்களுக்கு நெஞ்சத்துள்ளேதான் இருக்கிருன் என்கிருர் காரைக்காலம்மையார்.

"வானத்தான் என்பாரும் என்கமற் றும்பர்கோன்
தானத்தான் என்பாரும் தாம்என்க — ஞானத்தான்
முன்னஞ்சத் தால்இருண்ட மெய்யொளிசேர் கண்டத்தான்
என்நெஞ்சத் தான்என்பன் யான்"

என்று அவர் பாடியிருப்பதுதான் எத்தனை உண்மை. "சித்தம் புகுந்து தித்திக்க வல்ல கோன்" "ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை" என்று மாணிக்கவாசகப் பெருமானுர் இப்படி தித்திக்கத் தித்திக்க நெஞ்சத்து இறைவனைப் பற்றி கூறியிருப்பதன் சுவையே தனிச்சுவை.



# நீத்தார் - யார்?

திரு. ப. இராஜேஸ்வரன் அவர்கள்,
8, கார்ப்பரேஷன் காலனி,
ஆற்காடு ரோட், சென்னை – 24.
(கோடம்பாக்கம்)

---

பல நூற்றுண்டுகளாக மொழிப்பற்றும், இனப்பற்றும் நம்முன் குறைந்திருந்தபோது வடமொழிச் சொற்கள் தமிழில் மிகுதியாகக் கலந்து விட்டன. அக்காலத்தில் தமிழகத்தில் வடமொழி செல்வாக்கு பெற்றிருந்தமையால் பல தூய தமிழ்ச் சொற்கள் மறையலாயின. வழிபாடு, திருப்பதி, வழிச்செலவு, இழப்புப் போன்ற தமிழ்ச் சொற்கள் மறைய, ஆராதனை, ஷேத்திரம், யாத்திரை, நஷ்டம் போன்ற வடசொற்கள், வாழ்வு பெற்றன. இவ்வாறு தமிழ் மொழியில் புகுந்த பல வடசொற்களுள் ''சுபஸ்ரீகரணம்'' ''உத்தரகிரியை'' என்னும் வடமொழித் தொடர்கள் இறந்தோர்க்குச் செய்யும், இறுதிச் சடங்குகளைக் குறிக்க வந்தன.

தவத்திரு மறைமலை அடிகளார், திரு பருதிமாற் கலைஞர் போன்ற சான்ருேர்கள் தமிழிலேயே எல்லாக் கருத்துக்களையும் உணர்த்த முடியும் என்று தனித்தமிழில் பேசியும் எழுதியும் வந்தனர். இதன் விளைவாக தமிழகத்தில் ஓர் மறுமலர்ச்சி ஏற்பட்டது. புதிய சமுதாயம், தமிழில் நுழைந்த எத்துணையோ வட சொற்களைக் களைந்து, மறைந்துபோன அல்லது புதிய சொற்களை உருவாக்கி மொழியைத் தூய்மையாக்கியது. அக்ராசனர் என்ற வடசொல் போய் தலைவர் என்ற தமிழ்ச்சொல் வந்தது. தீபஸ்தம்பத்திற்கு மாற்ருக கலங்கரைவிளக்கம் என்ற அழகியசொல் முளைத்தது. விவாகம், ஔபாசனம் என்று எழுதுவதை நீக்கி திருமணம், எரியோம்பல் என்று இனிய தமிழில்

எழுதுகின்றனர். இவ்வாறு பலநூறு சொற்கள் இன்று தமிழில் வழங்கி வருகின்றன. எல்லாம் தமிழில் வேண்டும் என்னும் ஆர்வமும் அவ்வாறே செய்ய முடியும் என்னும் உறுதியும் கொண்ட தமிழர்கள் இச்சொற்களைப் புரிந்துக் கொள்ளுகின்றனர்; வரவேற்கின்றனர்.

இந்நிலையில் "சித்தாந்த வித்தகர்" அவர்கள் ஓர் ஐய வினவை எழுப்பி யுள்ளார்கள். இறந்தோர்க்குச் செய்யும் இறுதிச் சடங்குகளுக்கு சுபஸ்ரீகரணம், உத்தரகிரியை என்று எழுதும் வட சொற்களுக்கு மாருக தமிழில் நீத்தார் கடன் – நீத்தார் வழிபாடு எனறு எழுதலாமா? என்பதே அவர் ஐயம். வடமொழி மீதுள்ள வெறுப்பே இதற்குக் காரணம். இது அடுக்குமா? என்பதோ அவர் குறை!

நீத்தார் என்னும் சொல் திருக்குறளில் வருவதையும் அதற்குப் பரிமேலழகர் "துறந்தார்" என்று பொருள் கூறுவதையும் அவர் சுட்டிக் காட்டுகிருர். நீத்தார் என்னும் சொல்லை முற்றத் துறந்த முனிவர் என்னும் பொருளில் வள்ளுவர் கையாண்டிருப்பதால் இறந்தோரை இச்சொல் குறிக்காது என்பது அவர் துணிபு.

நீத்தல் என்னும் சொல்லுக்குப் பிரிதல், தள்ளுதல், வெறுத்தல், துறத்தல் என பல பொருள்கள் உள. துறத்தல் என்னும் சொல்லுக்கு விடுதல், நீக்குதல் என்னும் பொருள்கள் உள. எனவே இன்னவற்றைத் துறப்பதற்கு(விடுவதற்கு)தான் நீத்தல் என்ருமல் எதனை விடுவதற்கும், பிரிவதற்கும் அச்சொல்லைப் பயன்படுத்தலாம். 'வருண, நாம, காம' முதலாகத் துறந்த முனிவர்களைக் குறிக்கவே நீத்தார் என்னும் சொல் குறளில் கையாளப் பட்டிருப்பது உண்மையே. அதனுல் அதற்கு அப்பாலும் அச் சொல்லுக்குள்ள கருத்து விரிவடையாதென்பது பொருளல்ல. நீத்தார் என்னும் சொல் உடலை நீத்தவர், உயிரை நீத்தவர் என்று ஏன் கொள்ளக் கூடாது. உயிரை விட்டு விட்டான் என்று பேச்சு வழக்கில் பேசுகிருேம். இங்கு விடுதல் என்பது நீத்தல் தானே! பிறகு இறந்தாரை நீத்தார் என்று ஏன் குறிக்கக்கூடாது.

சொல் என்பது ஒரு பொருளைக் குறிப்பதற்காக மட்டும் எழுந்தது என்று கொள்ளுதல் தவறு. ஒரேசொல் பல பொருளை சந்தர்ப்பத்திற்கு ஏற்ப உணர்த்தும் என்பதை மொழி வல்லு நர்கள் விளக்கியுள்ளார்கள். "சொற்கள் வைரம் முதலிய மணி களைப் போன்றவை அல்ல. ஏனெனில் மணிகள் என்றும் ஒளி மாருமலும் ஒளி ஊடுருவிச் செல்லும் தன்மை படைத்தும் உள்ளன. ஆனால் சொற்கள் அவ்வாறு மாருத தன்மையுடை யவை அல்ல. கால தேசத்தை ஒட்டியும், தம்மைப் பயன்படுத்து பவனது மனநிலையை ஒட்டியும், சொற்கள் பொருள் திறத்தில் மாறும் தன்மை படைத்தவை" [A word is not a crystal - transparent and unchanged and it may vary greatly in colour and centent according to the circumstances and the time in which it is used – Justice O. W. Homes, Towne vs Lisner]

சங்க இலக்கியங்களில், நல்ல பொருளில் கையாளப் பட்டுள்ள பல சொற்கள் இன்று வேறு பொருளில் வழங்கப் பட்டு வருவதை எண்ணிப் பார்க்கும் போது இந்த மாற்றத்தை நன்கு உணரமுடியும்.

செங்காற் பல்லி தன்துணை பயிரும்
அங்காற் கள்ளியங் காடு இறந்தோரே? (குறுந் – 16)

இவ்வடிகளில் உள்ள இறந்தோர் என்னும் சொல் சங்கக்காலத் தில் சென்றான் என்ற பொருளில் ஆளப்பட்டிருக்கிறது. இன்று இறந்தோர் என்னும் இச்சொல் செத்தவரைக் குறிக்கிறது அல்லவோ? இவ்வாறே

புலி செத்து, வெரீஇய புகர்முக வேழம் (அகம் – 12)
மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர் (புறம் - 191)

புலிசெத்து – புலி என்று கருதி; மாண்ட என் மனைவி – மாட் சிமையுடைய என் மனைவி என்னும் பொருளைத்தரும் இச்சொற் றொடர்களை இக்காலத்தில் எழுதினால் என்ன பொருளில் கொள்ளுவார்கள்? புலி இறந்துவிட்டது, இறந்துவிட்ட என் மனைவி என்றல்லவோ நினைப்பார்கள். சங்கத்தமிழர் நல்ல

பொருளில் பயன்படுத்திய இறந்த, செத்த, மாண்ட என்ற சொற்களுக்கு இப்போது சாவு என்ற பொருள் ஏறிவிட்டது. காலம் செய்த இம்மாற்றத்தை தவறென்று சொல்லமுடியுமா? அல்லது தள்ளத்தான் முடியுமோ? வள்ளுவர் காலத்தில் துறந்தாரைக் குறிக்க வந்த நீத்தார் என்னும் சொல் இன்று இறந்தாரைக்குறிப்பதில் வியப்போ அன்றி, வேதனையோ கொள்ளுவதற்கில்லை.

உயர் தனிச் செம்மொழியாகிய தமிழ் அதன் நீர்மை குன்றாமல் இருக்க வேண்டுமாயின் அயல் மொழிச் சொற்களாகிய வடசொல்லும் திசைச் சொல்லும், வரம்பு மீறித் தமிழில் வந்து வழங்கக் கூடாது. அப்படி நுழைப்பதாயினும் இலக்கண நூலோர் செப்பமாய் வகுத்த முறையில் தமிழ் மொழியில் கலத்தல் வேண்டும். இதுவே தொல்காப்பியர் கருத்துமாகும். எளிய இனிய தமிழ்ச் சொல் இருக்கத் தேவையின்றி வடசொல்லை வழங்குதல் முறையன்று. தமிழ்மொழி தனித்து இயங்க வல்ல மொழி என்பதை உணரவேண்டும். வடசொல்லில் நமக்கு எந்நாளும் வெறுப்பில்லை; தமிழ் இலக்கணங்களும் அவ்வாறு பிற சொற்களைக் கலக்க இடந்தருகின்றன. அதற்காக புதிய தமிழ்ச் சொற்களை – சொல்லாக்கப் பணியை – குறுகிய நோக்கத் தோடும், ஒடுங்கிய சிந்தையோடும் புறக்கணிக்கக்கூடாது. அந்நிலையில் தான் தமிழ் மொழி வளரும்–வளம்பெறும்–பெருமையோடு வாழும்.

---

# ALL IS LOVE

**Swami Ram Tirtha**

To know Truth is to love Truth. What is Truth? Tatvam Asi or Love itself. Step by step, this Love manifested itself, through different stages, as the force of affinity, cohesion, gravitation, greed. desire, ambition, aspiration. In different modes and degrees of vibrations, this Love alone appeared as magnetism, electricity, light, heat, sound, etc.

Matter itself, in the ultimate analysis, resolves itself into concentrated Love. All law being nothing more than the discovery, of Unity in diversity, harmony in hetrogenity, unison in variety, is itself a phase of Love. In the inquisitive detectives, insidious spies, suspected friends, menacing foes, betraying comrades, there is no other power at work but Love. No other Government rules the world than Love.

Carlyle said, "Hatred is inverted Love." Fear is only congested Love. Else how could Love conquer fear? A man with a purse of a thousand pounds in the woods is full of fear only because of the loved gold. A free man greets all he meets. A free person enjoys the uniform circulation of Love. Love being the only force there is in reality, the realization of one's identity with Love is salvation and redemption. The conscious

Reproduction- with the kind permission of, the Editor 'Kaivalya Sudha', jnana Asram, Parlikad.

or unconscious struggle to achieve that absolute Love-consciousness in life, to be willing to follow the line of quickest approach to the goal, is wisdom. And to that end one has to rightly adjust the different love-forces in virtue.

Man's real Self is nothing but this transcendental Love. You are love. Oh! you are the universal Self. To realize and feel this truth in practical life is purity. But he who begins to seek things and hankers after them as not one with him, rends his Godself atwain and is thereby impure. Shunning and curling up is not purity; resisting and avoiding beauty is not chastity. "True purity is that where all beauty is absorbed in me. I feel and enjoy my spiritual oneness with all."

We cannot give up anything until we get something else to take its place, and progress must be gradual. Love and attachment are a form of grasping and grappling from another standpoint. Love rises from one object to another. The objects of love keep changing all the time, and in every act of unfoldment or development, it renounces a good many old clingings. By slow degrees, there comes at last a time when a person falls (or rather rises) in Love with Love itself and the object of love turns out to be the Self of each and all and the lover is tied back or married and re-united to this—his own Self supreme. After this marriage (that is religion—'re', again, 'ligo' unite), the true Lover finds the whole universe in his embrace and every object in his clasp. What can such a one desire? Can we desire the bride that is already folded in our arms?

When one realizes his own Self to be all, he cannot desire but simply enjoys everything as his. He looks at his work and finds it good. Every object brings him joy ineffable. Every creature pays him tribute from clod to the cloud, from the minutest atom to the mightiest Sun. From the lowest crawling vermin to the remotest shining star, all declare his glory, all sing his praise, Hallelujah. There is nothing different from such a one.



உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## திருப்பள்ளியெழுச்சி

இனி, திருப்பள்ளியெழுச்சி: முற்பதிகவரை, நாலாமிடமான கருணையின் பெருமையருளி, இப்பதிகமுதல் ஐந்தா மிடமானது வினவில், கேவல, சகல, சுத்த நீங்கி, உயிரானது திருவருள் உதயமாகுங் காலம் அப்பரையே யிருள் நீக்கிக் கதிர் உதயமாகும் போது, திருவருட் செயலே பரைப் பேருக அருளிய தெனக் காண்க.

இத்திருப்பா, ஆசிரிய விருத்தமாகத் திருப்பெருந்துறையிலோதி யதெனக் காண்க.

இனி, திருவருளுதயமானமையைக் கூறும் (தி.-ன.):—

போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணை துணை மலர்கொண்
டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழினகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
ஏற்றுயர் கொடியுடை யாயெமை யுடையாய்
எம்பெரு மான் பள்ளி யெழுந்தரு ளாயே.

(இ - ள்.) மலபரிபாக வான்ம சிற்சத்திப் பெண்கள் அனைவருங் கூடி, சிந்தைப் பாழறையைப் பள்ளியறையாகக் கொண்ட திருவோலக்கத் தரிசனத்தைத் துதிப்பது.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை—திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத்தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 13/- ஷை நூல் நிலையத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

என்னுயிர்க்கு 'அகர முதலெழுத்தே' போல் விளங்கும் பரமசிவனே! தேவரீர் அடிமையை இரட்சிக்க! ஏது நிமித்த மெனின், கேவல, சகலம், நீங்கிச் சுத்தமான திருவடி ஞானம் அறிவில் உதயமாயிற்று, ஆனது கொண்டு, இரண்டு பொற் பாத கமலங்களையும் ஞான மலரால் அர்ச்சனை செய்து, துதித்து வணங்கவே, நாதனுடைய திருவருண் முகமண்டலக் கருணை யின்பம் நமக்கெல்லாம் அருளும். அவ்வருளால் புன்சிரிப்புக் கொண்டு திருவடியைப் பூசிப்போம்; ஆனால் அவ்வருளுடைக் கடவுள் யாரெனில், தாமரை மலர் பொலியுங் குளிர்ந்த வய லுடைய திருப்பெருந்துறைப்பதியுடைய சிவகுருநாதன்; அவன் அங்கம் வினவில், இடபக்கொடியுடையான்; எம்மனோர்களை அநாதியே யடிமை கொண்டவன்; எமதுயிர்ப் பொருள்; இவ் வகையுடைய சுவாமி, எமதுளத்தில் திருப்பள்ளியோலக்கங் கொள்ள எழுந்தருளுக எனவருளியதைக் காண்க.

---

உ

சிவ சிவ

சிதம்பரத்தில் தில்லைவாழந்தணர் மாசி - பங்குனி - சித்திரை மாதங்களில் விசேஷ அன்னம்பாலிப்பு

முதற்பொருள் ரூ. 7500/-

ஆதி பரனாட அங்கைக் கனலாட
ஓதுஞ் சடையாட உன்மத்த முற்றாடப்
பாதி மதியாடப் பாரண்ட மீதாட
நாதமோ டாடினான் நாதாந்த நட்டமே.

தத்துவம் ஆடச் சதாசிவந் தானாடச்
சித்தமும் ஆடச் சிவசத்தி தானாட
வைத்த சராசரம் ஆட மறையாட
அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தே.

புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோல்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
அளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்
ஒளிக்குள் ஆனந்தத் தமுதூறும் உள்ளத்தே.

அங்கி தமருகம் அக்குமாலை பாசம்
அங்குசம் சூலம் கபால முடன்ஞானம்
தங்கு பயந்தரு நீல மும்முடன்
மங்கையோர் பாகமாய் மாநட மாடுமே.

என்று இன்னோரன்னவாறு திருமூலரால் விவரிக்கப்பெறும் பொன்தில்லைக்கூத்தை ஆடியருளுகிற,

மாணிக்கக் கூத்தனை வண்தில்லைக் கூத்தனைப்
பூணுற்ற மன்றுட் புரிசடைக் கூத்தனைச்
சேணுற்ற சோதிச் சிவானந்தக் கூத்தனை

ஆனிப் பொற்கூத்தனுக்கு அநுதினமும் முச்சந்தியும் அகம்படித் தொண்டு செய்யும் பேறுபெற்றுத் திருநடம்புரி

வார்க்கு ஆவாம் திருவினுற் சிறந்தவர்களும் செம்மையால் தணிந்த சிந்தைத் தெய்வவேதியர்களும் ஆன தில்லைவாழ் அந்தணர்களுக்குப் பின் 3-வது பாராவில் குறித்துள்ளவண்ணம் மாசி, பங்குனி, சித்திரை மாதங்களில் ஒரு நாளில் சிறப்பு அன்னம்பாலிப்பு நடத்துவித்தற் பொருட்டு, இத்தருமம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றது. இது 'சிதம்பரத்தில் தில்லைவாழந்தணர் மாசி, பங்குனி, சித்திரை மாதங்களில் விசேஷ அன்னம்பாலிப்பு' எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 7500/- ரூபா ஏழாயிரத்து ஐந்நூறு. இது பின்வருமாறு முதலீடு செய்யப்பெற்றுள்ளது.

அ. கும்பகோணம் சென்டிரல் பாங்க் ஆப் இந்தியா லிட் - ஆண்டுதோறும் 5% வட்டி தரக்கூடிய ஐந்து வருஷ நிலையான முதலீடு – தேதி. 19–6–64 – பிக்சட் டிபாஸிட் இரசீது நெ. F. D. L. T. 17806 Safe Custody Receipt No. 78519-23/5 Dated: 26—9—66, Rs 5000/-

ஆ. கும்பகோணம் கனரா பாங்க் லிட் – ஆண்டுதோறும் 7% வட்டி தரக்கூடிய நிலையான முதலீடு - 6-1-1967. 7 வருஷங்கள் – பிக்சட் டிபாஸிட் இரசீது நெ. 489183 A6/67 ரூ. 2500/-

ஆகக்கூடுதல் ரூ. 7500/-

இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனம் செய்யப்பெற்று வரும்.

3. இம்மூலதனத்தினின்று ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டியில் இத் தருமத்தை நடத்துவதற்குரிய நிர்வாகச் செலவுகள் போக எஞ்சியுள்ள தொகைகள் மூன்றில் ஒரு பங்குத் தொகை மாசி மாதத்தில் நம்மால் குறிக்கப்பெறும் ஒரு நாளிலும்,

இரண்டாவது பங்குத் தொகை பங்குனி மாசத்தில் நம்மால் குறிக்கப்பெறும் ஒரு நாளிலும், பாக்கி ஒரு பங்குத் தொகை சித்திரை மாசத்தில் நம்மால் குறிக்கப்பெறும் ஒரு நாளிலும் தில்லை வாழந்தணர்களுக்கு விசேஷ அன்னம்பாலிப்பு நடத்தச் செலவு செய்யப்பெறும். இவ்விசேஷ அன்னம் பாலிப்பு நம்மால் நாடோறும் நடத்தப்பெற்று வரும் தில்லைவாழந்தணர் அன்னம் பாலிப்புடன் அதிகப்படியாகத் தில்லைவாழந்தணர்களுக்கு மேற் கண்டவாறு ஒதுக்கப்பெற்ற தொகையிலிருந்து நடத்தப்பெற்று வரும்.

4. இவ்விசேஷ அன்னம் பாலிப்பு கால விலைக்கு ஏற்பவும் வட்டி வரவுக்கு ஏற்பவும் நம்மால் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின்படி நடத்தப்பெறும்.

5. இவ்வட்டி வருமானம் வேறு எம்முறையிலும் பயன் படுத்தப் பெறமாட்டாது. இம்முதற்பொருள் திரும்பியளிக்கப் பெறின் அதிக வட்டி தரும் நிலையான முதலீடுகளிலோ, அரசியல் கடன்தாள்களிலோ முதலீடு செய்யப்பெறும். இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரும்.

Tirupanandal
Dated 8-1-1967 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*



Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 9-1-67 as No. 1 of 1967 of Book 4, volume 53, pages 229 to 232.

## கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 11169 | தேன் துளி | சைவப் புலவர் பண்டித அ. சிவசுப்பிரமணிய பிள்ளை வடிவீஸ்வரம், நாகர்கோவில் |
| 11170 | ஞானசம்பந்தம், வெள்ளி விழாமலர் | தருமை யாதீன வெளியீடு |
| 11171 | திருக்குற்வத்திருப்பதிகங்கள் | தருமபுர ஆதீனம் |
| 11172 | முருகப்பெருமான் புகழ்க்கோவை | தொகுத்தவர் "சித்தாந்த வித்தகர்" கயப்பாக்கம், திரு. சோமசுந்தரஞ் செட்டியார் |
| 11173 | விநயகர் சதுர்த்தியின் மகிமையும் பூஜா விதியும் | இயற்றியவர் திரு. அண்ணுமலை ஸ்ரீ சோமசுந்தரி சுவாமிகள் |
| 11174 to 75 | ஸ்ரீ சொக்கநர்தசுவாமி திருவருட்பா | தருமை யாதீனம் |
| 11176 | திருவெண்பாவை திருப்பள்ளியெழுச்சி ஆண்டாள் அருளிய திருப்பாவை (விளக்க குறிப்புரையுடன்) | தருமை யாதீனம் |
| 11177 | பிரார்த்தனைப் பாமாலை | தொகுப்பாசிரியர் ராமநாதன் பி. ஏ., பி. எல்., அரிமழம் |
| 11178 | உண்டா? இல்லையா? | திருவாடுதுறை ஆதீனம் |
| 11179 | சிவலிங்கத்தத்துவார்த்தம் | திருவாடுதுறை ஆதீனம் |
| 11180 | நாஞ்சில்நாடு | கவிராசப் பண்டித ராம சுப்பிரமணிய நாவலர், நாகர்கோவில் |

| | | |
|---|---|---|
| 11181 to 82 | காரியனூர் ஸ்ரீ நடேச ஞானதேசிகர் தோத்திரத் திரட்டு | கிடைக்குமிடம் சாந்தி |
| 11183 to 85 | சிவபுராணம் | உரை ஆசிரியர், சிவலிங்கம்பிள்ளை |
| 11186 | முத்துக்குமாரசாமி முகுத்துறவி நற்சரிதம் | சுவாமிமலை அச்சுதாநந்த சமாதி நிலையம் |
| 11187 | குடியாச்சி | ஜான் டி. ரீட் |
| 11188 | தென்னிந்திய ரெயில்வே கால அட்டவணை1963 | தென் இந்திய ரெயில்வே |
| 11189 | தென்னிந்திய ரெயில்வே கால அட்டவணை 1964 | தென்னிந்திய ரெயில்வே |
| 11190 | பாரதியார் நூல் நிலையம் Sixth | பாரதி நூல் நிலையம் |
| 11191 | உயிர்மந்திரம் | உரையாசிரியர் பாலூர் கண்ணப்பமுதலியார் |
| 11192 | காவிரித்தென்கரைத் தலங்கள் | தருமையாதீனம் |
| 11193 | வாக்கியப் பஞ்சாங்கம், விளம்பி வருஷம் | G. S. வெங்கிட்டராமையா |
| 11194 | சார்வரி வருடம் சைவப் பஞ்சாங்கம் | தருமையாதீனம் |
| 11195 to 96 | கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி | ஷை |
| 11197 | வித்துவான் தேர்வு வினுவிடை புறம்பொருள் வெண்பாமாலை | ஆக்கியோன், வித்துவான் த. ம. வெள்ளை வாரணன், திருப்பனந்தாள். |
| 11198 | வித்துவான் தேர்வு வினுவிடை அகப்பொருள் விளக்கம் | வித்துவான் வெள்ளைவாரணன், திருப்பனந்தாள். |
| 11199 | கல் எழுத்துக்களில் | K. M. வேங்கடராமையா M. A. திருப்பனந்தாள். |
| 11200 | திருமுருகாற்றுப்படை | திருவாடுதுறை ஆதீனம் |

| | | |
|---|---|---|
| 11201 | திருமந்திரம் பாடல் (1-198) 7ம் திருமுறை | திருவாவடுதுறை ஆதீனம் |
| 11202 | திருமந்திரக்கட்டுரைகள் (அட்டமா சித்தி) | ஷ |
| 11203 | சிவபெருமான் திருவந்தாதி | ஷ |
| 11204 | சிவப்பிரகாசம்-உரையுடன் | ஷ |
| 11205 | தணிகை முருகன் பாமாலை திரட்டு | குக. ஸ்ரீரசபதி, மதருஸ் |
| 11206 | சிவனடித்தொண்டர் களம்பூர் செல்லப்பநாவலர் நூல் தொகுப்பு | சிவ. திரு. மு. சுந்தரமுதலியார், காமக்கூர் |
| 11207 | Endowments 1957 (170 to 237) | Sri Kasi Mutt, Tirupanandal |
| 11208 | கயிலைபாதி, காளத்திபாதி அந்தாதி குறிப்புரையுடன் | தருமையாதீனம் |
| 11209 | சண்முகநாத கவிராயர் | S. தாமஸ் ரெத்தினம், கீழ் ஆம்பூர், திருநெல்வேலி ஜில்லா |
| 11210 | திசைமாசம் திட்டங்கள் | தமிழாக்கம். T. V. பாலசுப்பிரமணியம். |
| 11211 | அகத்தியர் ஞானம் 30 | அ. வள்ளிநாயகம் பிள்ளை, விக்கிரமசிங்கபுரம் |
| 11212 | சன்மார்க்கசங்க நூற்றாண்டுவிழா மலர் 1865, 1965 | திருச்சிராப்பள்ளி. சமாச சுத்தசத்திய சங்கம், திருச்சிராப்பள்ளி |
| 11213 & 14 | தயவு | சுத்தசன்மார்க்கம். சத்தியஞானக் கோட்டம், திண்டுக்கல். சரவணந்தா |
| 11215 to 16 | சுத்தசன்மார்க்க விளக்கும் கொடியும் | Do. |
| 11217 | அத்தியூர் வாரவழிபாட்டுக்குழு 2வது ஆண்டு விழா வெளியீடு | K. C. மரப்பக்கவுண்டர், அத்தியூர் |

| | | |
|---|---|---|
| 11218 | பரமகுரு | அ. தா. இரத்தினம், கீழ் ஆம்பூர், திருநெல்வேலி மாவட்டம் |
| 11219 | அகத்தியர் ஞானம் 30 | Do. |
| 11220 | தணிகைமுருகன் பாமாலைத் திரட்டு | குசஸ்ரீ ரசபதி, சென்னை |
| 11221 | தஞ்சாவூர், சரபோஜி மகராஜா சரஸ்வதிமகால் வாசகசாலை பத்திரிகை 1965 | |
| 11222 | குமரகுருபரன் 1965ம் ஹூ தை மீ முதல் மார்கழி மீ முடிய | |
| 11223 | ஸ்ரீ சேக்கிழார். பிள்ளைத்தமிழ் குறிப்புரையுடன் | திருவாடுதுறை ஆதீனம் |
| 11224 | சிவப்பிரகாசம் உரையுடன் | திருவாடுதுறை ஆதீனம் |
| 11225 | தியானகாலம் | சிவத்தொண்டன் வெளியீடு, யாழ்ப்பாணம் சிலோன் |
| 11226 | சிவநெறி சிந்தனைத்திரட்டு | ஷை |
| 11227 | நற்சிந்தனை | ஷை |
| 11228 | சிவயோக சுவாமிகள். திருச்சரிதம் | ஷை |
| 11229 | யோகசுவாமிகள் நற்சிந்தனைத்திரட்டு | ஷை |
| 11230 | சிவபுண்ணியத்தெளிவு, பொழிப்புரையுடன் | திருவாடுதுறை ஆதீனம் |
| 11231 | காவேரிப்புராணம் | ஷை |
| 11232 | மலர்வாய்ப்பிறந்த வாசகத்தேன் | ஷை |
| 11233 | இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி | ஷை |
| 11234 | Sri Kumaragurupara Swamigal Boys' High School, Srivaikuntam | |

(தொடரும்)

உ

திருப்பனந்தாள் – ஸ்ரீ காசி மடம்

# ‘திருமுறை வெளியீடுகள்’

| | | | ரு. | பை |
|---|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) | ... | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம் மட்டும் புதிய பதிப்பு) | ... | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, | ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, | ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) | ... | 0 | 65 |
| 8* | திருக்கோவையார்–பேராசிரியர் உரையும் பழைய உரையும் (புதிய பதிப்பு) | ... | 2 | 90 |
| 9* | ஒன்பதாம் திருமுறை–திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் தெளிவுரை | ... | 1 | 50 |
| 10 | ,, ,, மூலம் மட்டும் | ... | 0 | 56 |
| 11* | திருமந்திரம் (புதிய பதிப்பு) ,, | ... | 2 | 25 |
| 12* | பதினோராந்திருமுறை (புதிய பதிப்பு) ,, | ... | 1 | 50 |
| 13* | பெரியபுராணம் (மூலம்மட்டும்) | ... | 3 | 00 |
| 14 | பெரியபுராணம் உரை நடை | ... | 2 | 00 |
| 15 | திருத்தொண்டர் புராண சாரம் | ... | 0 | 40 |
| 16* | அகத்தியர் தேவாரத் திரட்டு | ... | 0 | 36 |
| 17 | திருவிளையாடற் புராணம் மூலம் மட்டும் | ... | 3 | 00 |
| 18 | திருவிளையாடற் புராணம் உரை நடை | ... | 2 | 25 |
| 19 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) | ... | 1 | 75 |
| 20 | கந்த புராணம் – முதல் மூன்று காண்டங்கள் மூலம் மட்டும் | ... | 2 | 75 |
| 21 | ,, யுத்த தேவ காண்டம் ,, | ... | 2 | 00 |
| 22 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 | 50 |
| 23 | கந்தபுராண உரைநடை ,, | ... | 3 | 00 |
| 24 | திருக்குறள்-அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 | 50 |
| 25 | திருக்குறள்-பொருட்பால் ,, | ... | 2 | 50 |
| 26 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | | | |
| | ஷ 24, 25, 26. திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 | 00 |
| 27 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் (அச்சில்) | | | |
| 28 | தாயுமானசுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் | ... | 1 | 25 |
| 29 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 | 25 |
| 30 | திருக்கைலாய ஞானவுலா– உரையுடன் | ... | 0 | 50 |
| 31 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் | ... | 0 | 25 |
| 32 | கந்தரனுபூதி மூலம் (அச்சில்) | | | |
| 33 | கந்தரனுபூதி தெளிவுரை | ... | 0 | 35 |
| 34 | கந்தர்கலி வெண்பா - ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புகளுடன் (அச்சில்) | | | |
| 35 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் | ... | 0 | 10 |
| 36 | கந்தர்கலி வெண்பா மூலமும் உரையும் (அச்சில்) | | | |
| 37 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும் ஹிந்தியும் | ... | 0 | 50 |
| 38 | நீதிநெறி விளக்கம் - மூலம் | ... | 0 | 10 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.

Regd. No. M. 5574 குமரகுருபரன்

| | | |
|---|---|---|
| 39 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்-மூலம் ... | 0 15 |
| 40 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் ... | 0 37 |
| 41 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 !3 |
| 42 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக் கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 75 |
| 43 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | 1 25 |
| 44 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச் செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை ... | 1 00 |
| 45 | பண்டார மும்மணிக் கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 00 |
| 46 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 75 |
| 47 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ... | 0 50 |
| 48 | திருவருட்பயன் மூலம் இந்தி, ஆங்கில மொழிபெயர்ப்புடன் ... | 1 00 |
| 49 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை ... | 0 15 |
| 52 | திருக்குறள்-உரைக்கொத்து-அறத்துப்பால் 3-ம் பதிப்பு ... | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு ... | 2 75 |
| 54 | ஐந்து நீதி நூல்கள் ... | 0 10 |
| 55 | ஸ்ரீ சயிலம் ... | 0 10 |
| 56 | திருவாசகம் குறிப்புரையுடன் (விஷய சூசனத்துடன்) பழய பதிப்பு | 1 50 |
| 57 | திருவாரூர்-திருப்பனுவல்கள் ... | 0 10 |
| 58 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... | 0 10 |
| 59 | பழமொழித்திருமுறை ... | 0 25 |
| 60 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 50 |
| 61 | Hymns and Proverbs ... | 0 30 |
| 62 | அப்பர்விழா வெளியீடு ... | 0 25 |
| 63 | நவக்கிரகமாண்பு ... | 0 25 |
| 64 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் ... | 0 30 |

*மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-*

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

*"தியாகராஜ விலாசம்" 53. பிள்ளையார் கோயில்தெரு,*
*திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5*

குறிப்பு:- ** இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.*